# சைவ சமயக் கல்வி - IV




தருமபுர ஆதீனம்
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம், மயிலாடுதுறை,
609 001,
தமிழ் நாடு.

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A B.T

தருமை ஆதீனம் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக
பரமாசாரிய சுவாமிகள்

தருமை ஆதீனம்
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
நிறுவியருளிய



26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

உ

# சைவ சமயக் கல்வி-IV




ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
முந்நூறாவது ஆண்டு நினைவாக

வாரணாசியில் நடைபெற்ற
மூன்றாவது அனைத்துலக சைவசித்தாந்தக் கருத்தரங்கில்
வெளியிடப்பெற்றது.

டிசம்பர் 8, 9, 10 – 1988.



தருமபுர ஆதீனம்
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம், மயிலாடுதுறை, - 609 001.
தமிழ் நாடு.

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B.T

தருமை ஆதீனம் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக
பரமாசாரிய சுவாமிகள்

தருமை ஆதீனம்
அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
நிறுவியருளிய



26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

# முன்னுரை

சாத்திரங்கள் எளிமையாக அமையும் வகையில் எழுந்த சிந்தனைத் தேட்டத்தில் விளைந்தவைதாம் பண்டார சாத்திரங்கள்.

பண்டாரம் என்ற சொல்லுக்குப் பொக்கிஷம் **(Treasury)** என்ற பொருளை மணிவாசகர் வாக்கு விளக்குகிறது. 'மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே' - என்பது திருவாசகத்தொடர்.

மெய்கண்ட சாத்திரங்களை வழியொட்டியும், எளிமைப்படுத்தியும் இலக்கண இலக்கியக் கூட்டமைப்பாக எழுந்த பண்டாரசாத்திரங்களை ஆதீனங்கள்தாம் வழங்கின. அவ்வாதீனங்களின் குருமூர்த்திகளாக விளங்கியவர்களைப்பண்டாரசந்நிதிகள்என்று வழங்கும் வழக்காறும் இருக்கிறது.

தருமபுரம் - திருவாவடுதுறை ஆதீனங்களை அலங்கரித்த பரமாசாரியர்கள் - அடியார்கள் ஆகியோரின் அருள்வாக்குகள் தமிழ்-வடமொழி சாத்திர தோத்திர விளக்கமாகவே விளங்குகின்றன.

சிறப்பாகத் தருமபுர ஆதீனத்தைத் தோற்றுவித்தருளிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் எட்டு நூல்களை அருளிய வகையில் அத்தொகுதியை 'அட்டகம்' என்று குறிப்பிடுகிறோம்.

அச்சிறப்புடைய ஞானநூல்களையும் அவர்களுக்குப் பின் வீற்றிருந்த ஒன்பதாவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அருளிய சித்தாந்த நிச்சயத்தையும், பத்தாவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அருளிய ஸ்ரீ காசி துண்டிராஜகணபதி திருஅருட்பா நூலையும் ஆய்வு செய்து கட்டுரையாகத் தந்துள்ளனர் அறிஞர் பெருமக்கள்.

தருமை ஆதீனம் அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் ஞானசம்பந்தம் இதழ்வழிப் பயிற்சியை மேற்கொண்டு முதலாண்டு வேதாகம புராண இதிகாசங்களைப் பாடமாகப் பயிற்றுவித்து, சைவசமயக்கல்வி - I நூல் வெளியிடப்பெற்றுள்ளது. இரண்டாம் ஆண்டு பன்னிரு திருமுறைகளையும் பாடமாகப் பயிற்றுவித்து, சைவசமயக்கல்வி - II நூல் அச்சிட்டு 1986 மலேசியா — கோலாலம்பூரில் நடைபெற்ற இரண்டாவது அனைத்துலக சைவசித்தாந்தக்

கருத்தரங்கில் வெளியிடப்பட்டுள்ளது. இதுபோது - மூன்றும் ஆண்டு சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினொன்றினையும் பாடமாகப் பயிற்றுவித்து, சைவசமயக்கல்வி- III நூலும், ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய பண்டார சாத்திரங்கள் 8ம், சித்தாந்தநிச்சயம், ஸ்ரீ துண்டிராஜ கணபதி திருவருட்பா ஆகியவைகளைப் பாடமாகப் பயிற்றுவித்து, சைவசமயக்கல்வி - IV நூலும் அச்சிட்டு 1988 டிசம்பர் 8, 9, 10 நாட்களில் வாரணசியில் நடைபெறும் மூன்றுவது அனைத்துலக சைவ சித்தாந்தக் கருத்தரங்கில்,

தருமை ஆதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகள்**

திருவுளப்பாங்கின் வண்ணம் இத்தொகுதிகள் வெளியிடப் பெறுகின்றன.

" சாத்திரமும் தோத்திரமும் ஆனார் தாமே " - என்ற அப்பர் அருள் வாக்கிற்கிணங்க அவ்வடிவாய் நின்று அருள்பாலிக்கும் ஸ்ரீவிஸ்வேசுவரன் விசாலாட்சி அருள் அனைவருக்கும் - சிறப்பாக இக்கருத்தரங்கில் கலந்துகொள்ளும் அறிஞர் பெருமக்களுக்கும் கிடைக்குமாறுகருணைபாலித்துள்ள ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகளைப் பணிவுடன் போற்றுகின்றேன்.

இந்நூல்களை அச்சிட்டுத்தந்த ஞானசம்பந்தம் அச்சகத்தினருக்கும் இப்பணியில் பெரிதும் துணைநின்று பணிபுரிந்த வித்துவான். திரு. கா. ம. கண்ணப்பன், எம். ஏ., அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன்.

சமய உலகமும் தமிழுலகமும் இச்சமயப் பேழைகளைத் தக்கவாறு ஏற்றுப் போற்றும் என முழுமையாக நம்புகிறேன்.

அனைத்துலக சைவசித்தாந்த
ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம்,
மயிலாடுதுறை - 609 001.
1—12—1988.

டி. என். இராமச்சந்திரன்,
கௌரவ இயக்குநர்.

# பொருளடக்கம்





உ

சிவமயம்

# சொக்கநாத வெண்பா

---

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகைகாணேன் — உணர்த்தியென்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா.

ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி — நேசா
ஒளித்திருந்த இன்பவெள்ளம் ஒன்ற உயிர்க்கென்றும்
அளிப்பவன்நீ சொக்கநா தா.

ஆறுறு தத்துவமும் அத்திலுறை மூர்த்திகளும்
பேறும் வினையினையும் பெந்தித்து — மாறுமல்
ஆட்டுவது நீயானல் ஆகா மியமென்பால்
சாட்டுவதென் சொக்கநா தா.

நானே தனுகரணம் நானே மலமாயை
நானே இவைகள் நடத்துவது — நானேதான்
பூண்ட வினைஅறுப்போன் புண்ணியபா வம்புரிவோன்
ஆண்டவனே சொக்கநா தா.

நீயியற்ற ஓர்பொருளை நிச்சயித்த நாயேனும்
போயியற்றல் செய்யப் புரிகுவேன் — நீயியற்றல்
ஆக்கா தனுவும் அசையுமோ அவ்விகற்பந்
தாக்காத சொக்கநா தா.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.



# கட்டுரை வழங்கியவர்கள்

1. வித்துவான்
   வி. சா. குருசாமி தேசிகர்,
   முதல்வர்,
   தருமை ஆதீனக் கலைக் கல்லூரி,
   தருமபுரம்

2. டாக்டர் இரா. செல்வக்கணபதி,
   துணைப்பேராசிரியர்,
   தருமை ஆதீனக் கலைக் கல்லூரி,
   தருமபுரம்.

3. திரு. தி. ந. இராமச்சந்திரன்,
   கௌரவ இயக்குநர்,
   அனைத்துலக சைவசித்தாந்த
   ஆராய்ச்சி நிறுவனம், தருமபுரம்.

4. வித்துவான் திருமதி. ப. நீலா,
   துணைப்பேராசிரியை,
   தருமை ஆதீனக் கலைக் கல்லூரி,
   தருமபுரம்.

5. டாக்டர் கு. சுந்தரமூர்த்தி,
   பேராசிரியர்,
   அனைத்துலக சைவசித்தாந்த
   ஆராய்ச்சி நிறுவனம், தருமபுரம்.

6. டாக்டர் மு. சிவச்சந்திரன்,
   துணைப்பேராசிரியர்,
   தருமை ஆதீனக் கலைக் கல்லூரி,
   தருமபுரம்.

7. திரு. வி. கணேசன்,
   சமஸ்கிருதப் பேராசிரியர்,
   அரசர் கல்லூரி, திருவையாறு.

உ

சிவமயம்

# சிவபோகசாரம்

---

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே — மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம்.

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா — அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு.

வாக்குமனக் காயத்தான் வந்தபொருள் அத்தனையும்
வாக்குமனக் காயமுடன் மாயுமே — வாக்குமனக்
காயம் உடனிழந்து காண்ஞா திருஞான
ஞேயம் இழந்த நிலை.

உள்ளதுதான் போமோமற் றில்லாததுவருமோ
பள்ளமே வெள்ளம் பரவாதோ — கள்ளமாய்ப்
பித்துப்போ லேபிதற்றும் பேதைமட நெஞ்சமே
செத்துபோ னானே சிவன்.

ஆகம் சிறைச்சாலை அக்கரணம் காவலாள்
போகம் புவனம் பொருந்துமிடம் — ஓகோ
இதனுட் படுமுயிர்கட் கிடேற்றஞ் செய்வான்
அதனுக் கிறைவன் அரன்.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்.



# சிவபோக சாரம்

வித்துவான்

திரு. வி. சா. குருசாமி தேசிகர்

தருமை ஆதீன ஆதி பரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தரும் அவர்களுக்குப் பின் ஆதீன ஞானபீடத்தில் எழுந்தருளி விளங்கிய மகாசந்நிதானங்களும் அருளிய நூல்கள் தருமை ஆதீன பண்டார சாத்திரங்கள் என வழங்கப்பெறும்.

பண்டாரம் என்ற சொல்லுக்குக் கருவூலம் என்பது பொருள் ஆகும். இறைவன் திருவருளாகிய மெய்ஞ்ஞானக் கருவூலத்தைத் தேக்கி வைத்துச் சீடர்களின் பரிபாக நிலைக்கேற்ப வழங்கலின் மகாசந்நிதானங்களைப் பண்டாரசந்நிதிகள் (சந்நிதி – வாயில்) எனவும் அவர்கள் அருளிய அருள்நூல்களைப் பண்டார சாத்திரங்கள் எனவும் வழங்குவர் பெரியோர்.

தருமை ஆதீன பண்டார சாத்திரங்களில் ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருளிய நூல்கள் எட்டு. அவைகளில் ஒன்றாக விளங்கும் சிவபோகசாரம் தமிழக மக்கள் பலராலும் ஓதப் பெற்று வரும் சிறந்த சாத்திர நூலாகும். சைவசித்தாந்த ஞானத்தை இந்நூல் எளிய முறையில் திரட்டித் தருதலின் பதினெண் சித்தர் ஞானக் கோவையில் இந்நூலையும் சேர்த்து மக்கள் பயின்று பயன்பெற்றனர். முழுவதும் வெண்பா யாப்பில் அமைந்த 139 பாடல்களைக் கொண்ட இந்நூலைக் கற்போர் சித்தாந்த தத்துவக் கொள்கையின் சிறப்பையும் பயனையும் உணர்வர்.

சிவபோகம் என்பது ஆன்மா மும்மலங்களின் நீங்கிச் சிவானந்த வெள்ளத்தில் திளைத்து இன்புறுதலைக் குறிக்கும். 'பிரியா இருள், அருளால் நீங்க இன்பாய்த் துன்றல் சிவபோகம்' என்பர் இந் நூலாசிரியர். சாரம் – முடிந்த பயன். சிவபோகமாகிய முடிந்த பயனைக் கூறுவதால் இந்நூல் சிவபோகசாரம் எனப் பெற்றது.

## குருவருள் :

இறைவன் குருவாகி வந்து அருள் புரியாவிடில் ஒருவருக்கும் ஞானம் உண்டாக மாட்டாது என்பது சித்தாந்த சாத்திரங்களின் சீரிய துணிபாகும். மானைக் காட்டி மானைப் பிடிப்பது போலவும், மீனைக்காட்டி மீனைப் பிடிப்பது போலவும் இறைவன் மும்மலமுடைய சகலான்மாக்களை ஆட்கொள்ள மானுட வடிவில் வந்தருளுவான் என்பது சாத்திர நூல்களின் முடிபாகும். இம்முறையில் தம்மை ஆட்கொண்டருளும் குருநாதரைச் சீடர்கள் உணர்ந்து சிவமாகவே கருதுதலை ஞான நூல்கள் பலவற்றிலும் காணலாம். குருஞான சம்பந்தர் தம்மை ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து ஆட்கொண்டருளிய கமலை ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரைச் சிவமாகப் போற்றி அதன் வழியே குருவின் பெருமையை இந்நூலில் 20 க்கு மேற்பட்ட பாடல்களால் அருளிச் செய்துள்ளார்.

கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் கயிலாய பரம்பரையில் நந்தி மரபில் மெய்கண்ட சந்தானத்தில் வந்தவர். ஸ்ரீ குருஞானசம்பந்தர் மதுரைச் சொக்கேசன் ஆற்றுப்படுத்தியவாறு திருவாரூரை அடைந்து ஞானப்பிரகாசரிடம் உபதேசம் பெறுகிறார். குருவருளால் சிவஞானமும் சிவானந்தமும்பெற்று இன்புறுகிறார். தம் அருளனுபவ நிலையைப் பல பாடல்களால் அருளிச்செய்கின்றார்.

இறைவன் நம்போல் குருநாதராக எழுந்தருளி வாராவிடில் நாம் உய்தி பெறமுடியாது என்பதைக் குருஞானசம்பந்தர்,

"ஆரறிவார் நீதிவழி ஆரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும் — பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசன்எனும்
அத்தன் என்போல் வந்திலன் ஆனால்."

என்ற பாடலால் குருநாதனே நீதிநெறிகளையும்சித்தி, முத்தி, தவம் அன்பு ஆகியவற்றையும் உயிர்கட்கு உணர்த்தி உய்திபெறச் செய் தருளுகிறார் என்று அறிவுறுத்துகிறார். இப்பாடலில் உலகியலுக்கு வேண்டற்பாலனவாகிய நீதிகளும், சித்திகளுமாகிய அவை தாமும் இறைவன் உணர்த்தினாலன்றி உயிர்கள் தாமே உணர்தற்கு இயலாதனவாகும். இதனைத் திருச்சாழலில் மணிவாசகர் சனகாதி நால்வருக்கு இறைவன் அறமுதல் நான்கை உணர்த்தாவிடில் அவர்கள் உலக இயற்கையை அறியாதவராயிருப்பர் எனக் கூறுதலாலும் அறியலாம்.

எவ்வளவு கற்றறிந்திருந்தாலும் குரு உபதேசத்தினாலேயே உண்மை ஞானம் வாய்க்கும் எனக்கூறும்,

"சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்கும் நலம் வந்துறுமோ — ஆர்த்தகடல்
தண்ணீர் அருந்தினர்க்குத் தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய் இதனைச் செப்பு."

என்ற திருக்களிற்றுப்படியார்ப் பாடலுடன் ஒப்பிட்டு இன்புறும் வகையில்,

"ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும் — குருவருளால்
வைத்தபடி இருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாம் தினம்"

என்ற பாடலால் ஸ்ரீ குருஞானசம்பந்தர் நூல்களைக் கற்றலினால் மட்டும் ஒருவருக்குச் சிவஞானம் கைகூடிவிடாது. குருவருள் இல்லையேல் எத்தனை சித்திகளைப் பெற்றிருப்பினும் அவர்கள் இறை இன்பத்திற்கு உரியவர்களாகார் என்பதை உணர்த்தக்காணலாம்.

## குரு தரிசனம் :

'தெளிவு குருவின் திருமேனி காண்டல்' என்பது திருமந்திரத் தொடர். குருதரிசனம் ஞானத்தைத்தரும் என்பது அதன் பொருளாகும். குருஞானசம்பந்தர் குருதரிசனத்தால் தமக்கு விளைந்த பயனை ஒரு பாடலில் இனிது விளக்கியுள்ளார்.

"கண்டேன் இப்பாசம் கழிந்தேன் அமுதைமுகந்து
உண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன் — வண்டிமிர்காத்
தேனைப்பொழி கமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான்"

என்பதுதான் அப்பாடல்.

குரு நாதரைத் தரிசித்த அளவில் தமக்குச் சிவானந்தம் விளைந்ததை இப்பாடலில் குருஞானசம்பந்தர் விளக்கக் காணலாம். தம்மை நாடி வரும் வண்டுகள் உண்ணத் தேனைப் பொழியும் மலர்ச் சோலைகளை உடைய கமலை என்ற இயற்கை வருணனையில், தம்மை நாடிவரும் சீடர்கள் நுகரச் சிவானந்தத் தேனை வழங்கும் குருநாதர் வீற்றிருக்கும் இடம் என்ற சிறப்பும் உள்ளுறையாக அமைத்திருத்தலை அறிந்து மகிழலாம்.

## குருவே சிவம் :

குருவும் சிவமும் வேறல்லர் என்பதையும், சிவபிரானே தம்மை ஆட்கொள்ள மானுட வடிவில் வந்துள்ளார் என்பதையும் விளக்கும் பல பாடல்களைச் சிவபோகசாரத்தில் காணலாம்.

அருவும், உருவும், அருவுருவும் அல்லாத சிவ பரம்பொருளே திருவாரூரில் ஞானப்பிரகாச குருநாதராக எழுந்தருளி வந்துள்ளார் எனவும், அரியஅயன் ஆகியோர்களால் அடியும்முடியும் காணப் பெறாத பெரியவனே அக்குருநாதர் வடிவில் வந்துள்ளார் எனவும் கூறும் உள்ளிருந்து உணர்த்தி வந்த அப்பரம் பொருள் மெள்ள மனித உருவில் நம்மை ஆட்கொள்ளக் குருவாக வந்துள்ளது எனவும் பாடல்களை இந்நூலில் காணலாம்.

## குரு உபதேசம் :

'தெளிவுகுருவின் திருவார்த்தை கேட்டல்' என்பது திருமந்திரம். குரு உபதேசம் நமக்குச் சிவஞானத்தைத் தரும் என்பது இத் தொடரின் பொருளாகும். சிவபிரான் குருநாதராகத் தோன்றியும் உபதேசித்தும் ஆட்கொள்ளும் இயல்பையும் சிவபோகசாரம் விளக்குகிறது.

> " தேடும் திரவியமும் சிற்றறிவும் பற்றுதலும்
> கூடும் பொய் என்றருளில் கூட்டினன் — நாடரிய
> ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
> வானப் பிறையணிந்த மன் "

என்ற பாடல் குருஉபதேசப் பகுதியாக விளங்குவது. பிறையணிந்த பெருமானாகிய ஞானப் பிரகாச குருநாதன் செல்வம், யாக்கை, அவற்றை மெய்யென்றுணரும் புல்லறிவு, அவற்றிற் செலுத்தும் பற்று ஆகியன பொய் எனவும், திருவருள் ஒன்றுமே மெய் எனவும் காட்டி அவற்றினின்று என்னைப் பிரிவித்துத் திருவருளில் சேர்ப்பித்தார் என்பது பாடலின் திரண்ட கருத்தாகும்.

குரு உபதேசத்தால் உயிர்கள் சிவஞானத்திலழுந்தி இன்புறும் நிலை வாய்க்கும். அத்தகைய நிலை கைவரும் போது அதிலேயே திளைத்திருக்க வேண்டும் என்ற நினைப்பும் உலகியலில் மீண்டும் வாரா நிலை அருளவேண்டுமெனக் குருநாதனை வேண்டவும் தோன்றும்.

" ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருக்க அருள் "

எனக் குருஞானசம்பந்தர் தம் குருவிடம் வேண்டலால் இதனை நாம் அறியலாம்.

## அருள் வேட்டல் :

தற்பெருமை பாராட்டல், பிறரை எள்ளி உரைத்தல், யான் என்னும் செருக்கு, வெகுளி, பொருள்கள் மேல் செல்லும் அவா, நல்வினை தீவினைகள் ஆகிய மல காரியங்கள் நீங்காத வரை இறையருள் பெற்று இன்புற்றிருக்கும் நிலை உயிர்கட்கு வாய்க்காது என்று கூறும் பாடல் நாம் நம்மைத் தூய்மை செய்து கொள்ள உதவும் அறிவுரையாய் இந்நூலில் விளங்குகிறது.

" ஒருமையுடன் ஈசனருள் ஓங்கி என்றும் தூங்கல்
அருமை அருமை அருமை — பெருமை இடும்(பு)
ஆங்காரம் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போது தானே "

என்ற பாடல் உயிர்கட்குப் பரிபாக நிலை கைவருதற்குரிய உபாயங்களைக் கூறுவதைக் காணலாம்.

இவ்வாறு குருஞானசம்பந்தர் குருவின் பெருமை, குருதரிசனத்தால் விளையும் நன்மை, குரு உபதேசத்தின் சிறப்பு, குருவருள் கிடைத்ததற்கு நாம் பரிபாகப் படுதல் முதலிய பல கருத்துக்களை உள்ளடக்கிய பாடல்களைச் சிவபோகசாரத்தின் முற்பகுதியில் தெரிவித்தருளுகிறார்.

## சித்திநெறி :

'சிவத்துக்கு மேல் தெய்வம் இல்லை, சித்திக்கு மேல் நூல் இல்லை' என்பது பழமொழி. அருணந்தி சிவம் அருளிய சிவஞான சித்தியாருக்குத் தனி விளக்கம் கண்ட ஆதீனம் எனப் போற்றப் பெறுவது தருமை ஆதீனம். குருஞானசம்பந்தர் சிவஞான சித்தியாருக்கு ஞானாவரண விளக்கம் என்ற பெயரில் விளக்க நூல் ஒன்றை அருளியுள்ளார். மேலும் சிவபோகசாரத்தில், முத்திநிலை எய்தவிரும்புவோர் சிவஞான சித்தியாரை முழுவதும் படித்துணர்தல் கூடவேண்டா, விருத்தப் பாவடியில் அமைந்த அந்நூற் செய்யுள் ஒன்றில் ஒரு பாதியை உணர்ந்தாலே போதும் என்று உரைத்தருள்கிறார்.

"ஆருறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீருக முத்திநிலை நிற்போர்க்குப் — பேருகப்
பார்விரித்த நூல்எல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர் விருத்தப் பாதிபோ தும்"

என்பது தான் அப்பாடல். தாயுமான அடிகள் குருமரபு வணக்கம் கூறும் பாடலில் குருஞானசம்பந்தர் அருளிய இச்சிவபோகசாரப் பாடல் கருத்திற் கியையப் 'பாதி விருத்தத்தால் இப் பாரனைத்தும் பொய்யென உண்மை சாதித்தார் பொன்னடியைச் சாரும் நாள் எந்நாளோ' என அருணந்தி சிவத்தைப் போற்றி உரைத்தருளுகின்றார்.

மேற்கூறிய சிவபோகசாரப் பாடல், 'ஆணவம், கன்மம், மாயை ஆகியமும்மலங்களும் கெட்டொழிய முத்திநிலை ஒன்றையே பயனாகக் கருதி நிற்கும் தீவிர உணர்வுடையார்க்கு பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய இருவகைப் பயனும் கைகூடுதற் பொருட்டு, இவ்வுலகில் பலவாய்ப் பரந்து விரிந்து கிடக்கும் நூல்களை யெல்லாம் பார்த்து அறிவதைக் காட்டிலும் சிவஞான சித்தியாரில்வரும் ஒரு திருவிருத்தத்தில் பாதியை உணர்தல் ஒன்றே போதுமானது' என்பது பாடலின்பொருளாகும்.

குருஞானசம்பந்தர் கூறும் அச்சிவஞான சித்தியாரில் வரும் விருத்தம்,

"அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்து அந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாம் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதார னாயே"

என்பதாகும். இப்பாடலின் முற்பாதியே குருஞானசம்பந்தர் சிவபோகசாரத்தில் ஓர் விருத்தப்பாதி எனச் சுட்டி உணர்த்தும் பாடற்பகுதியாகும்.

'அறியாமையாகிய கேவல நிலையையும், அறிவாகிய சகல நிலையையும் சிவஞானத்தால் நீக்கி, ஆன்மாவினிடத்துப் பரமான்மாவாய்ப் பிரிவற விளங்கும் சிவத்தை அருளினால் அறிந்து தற்போதத்தால் ஆராயாது அருளினால்ஆராய்ந்துதெளிந்து பின்கருவிகளோடும்

கூடி சகலப் படாமலும், கேவலப் படாமலும் அவ்வருளோடு கூடி நிட்டை நிலையில் நின்றால், பெத்த நிலையிலே ஆன்மாவோடு பிரிவின்றி நின்ற சிவன் சுத்தநிலையில் பிரிந்து தோன்றி அனைத்தையும் அவ்வுயிர்க்குச் சிவ சொரூபமாகக் காட்டி இவையெல்லாம் தானல்ல என்னும் உண்மையை அவ்வுயிர்க்குஉணர்த்தி நிராதாரனாய்த் தோன்றி அருளுவான்' என்பது சிவஞான சித்தியாரின் கருத்துரையாகும்.

குருஞானசம்பந்தர் இச்சிவஞான சித்தியாரில் உண்மை ஞானம் பெறவிரும்புவோர் இத்தகைய நிலையை அடைய வேண்டுமெனக் கூறலைச் சிவபோகசாரப் பாடலின் கருத்தாகக் கொள்ளல் வேண்டும்.

சாத்திரக் கருத்து :

" முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் — ஒத்த
இரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவர்என் றோதும் விதி "

என்ற சாத்திரப் பொருளை,

" இந்தனத்தில் அங்கி எரியுறுநீர் தேன்இரதம்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் — சந்ததமும்
அத்துவிதம் ஆவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை "

என்ற இச்சிவபோகசார வெண்பாவில் உணர்த்தக் காண்கின்றோம்,

" என்னை அறிவென்றான்; என்னறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான்; சந்ததமும் — என்னைஉன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான்; இம்மூன்றும்
ஆராய்ந் தவர் முத்த ராம் "

" எங்கும் இருக்கும் அறிவுநீ; ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்; — பொங்கும்
மலம்மறைத்தல்; மாயை மயக்கல்; விகாரப்
பலமனைத்தும் கன்மமலம்; பார் "

என்ற பாடல்கள் முப்பொருள் இயல்புகளைத் தெளிவுற விளக்குவன.

"வெள்ளத்துள் நாவற்றியாங்கு" என்ற திருவாசகத்தை நினைப்பிக்கும்முறையில், "ஈசனடியில் இருக்கையிலே எங்கெங்கும், ஈசனடி தேடி இளைத்தேனே" என்று அருளிய பகுதி நம்மனோர் அறிந்து பயன்கொளற்பாலது.

" புசிப்போம் சிவபோதம்; பூரணமாய் எங்கும்
வசிப்போம்; உலகில் வசியோம்; — முசிப்பின்றி
வாழ்வோம் [illegible]தயுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்
தாழ்வோம் எமக்கார் சரி."

என்னும் அரிய வெண்பா, இவர்களது சிவானுபூதிச் சிறப்பைத் தெள்ளத்தெளிய விளக்குகின்றது. இங்ஙனம் அனுபூதியில் திளைத்து நின்ற இவர்கள் ஐயன் அருளையன்றி வேறு செயலற்றிருந்தமையை,

" எங்கே நடத்துமோ, எங்கே கிடத்துமோ
எங்கே இருத்துமோ என்றறியேன் — கங்கைமதி
சூடினன், தில்லையிலே தொந்தொமென நின்றுநட
மாடினன் எங்கோன் அருள் "

என்ற வெண்பாவால் அறிகின்றோம். இங்ஙனம் திருவருள் வெள்ளத்திலே திளைத்துச் செயலற்றிருந்த இவர்கள், நம்மனோர்க்குச் செய்யும் உபதேசங்களைத் தங்கள் நெஞ்சை நோக்கிச் சொல்வனவாக அருளிச்செய்கின்ற முறை அறிந்து மகிழத்தக்கது;

" ஊட்டும் வினைஇருந்தால், உன்ஆணை, உன்பதத்தைப்
பூட்டிப் பிடித்துப் புசிப்பிக்கும் — கேட்டுத்
திரியாதே; வந்துதில்லைத் தெய்வமே என்றென்(று)
எரியாதே; நெஞ்சே இரு "

" பரபரக்க வேண்டா; பலகாலுஞ் சொன்னேன்;
வரவரக்கண் டாராய் மனமே! — ஒருவருக்கும்
தீங்கு நினையாதே, செய்ந்நன்றி குன்றாதே;
ஏங்கி இளையா திரு "

என்ற பாடல்கள் நம் மன அமைதிக்கு உதவும் பாடல்களாக விளங்குவன.

இவர்கள் இந்நூலின்கண் முடிவாக அனைவர்க்கும் அருளிச் செய்தது திருமுறைப்பாராயணமும், திருக்கோயில் வழிபாடுமே. அவ்விரு வெண்பாக்களும் என்றும், யாவரும் நினைக்கற்பாலன.

" ஆசையறாய்; பாசம்விடாய்; ஆனசிவ பூசைபண்ணாய்;
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய் — சீசீ
சினமே தவிராய்; திருமுறைகள் ஓதாய்;
மனமே உனக்கென்ன வாய். "

இவ்வரிய சாத்திர நூலை ஓதி, உணர்ந்து, உளங்கொள்வார் உண்மை ஞானத்தை உற்று அனுபூதி நிலையை அடைதல் ஒருதலை. இந்நூற்கு அகல உரை ஒன்று எழுதப்பட்டு ஆதீன வெளியீடாக வெளிவந்திருத்தலால், அதுகொண்டு இதன் பொருளைத் தெளிய உணரலாகும்.

பண்டார சாத்திரங்கள் :

# சொக்கநாத வெண்பா

டாக்டர். திரு. இரா. செல்வக்கணபதி, எம். ஏ., பிஎச். டி.,

திருக்கயிலாய பரம்பரையில் மெய்கண்டார் மற்றும் அவர் வழிவந்த ஞானாசிரியர்கள் பலரும், சிறந்த சைவசித்தாந்த சாத்திர நூல்கள் பலவற்றை அருளிச்செய்தவர்கள். சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள், பதினொரு நூல்கள் சந்தானாசாரியர் சிலரால் இயற்றப்பெற்றன. மறைஞான சம்பந்தர் நூல் ஏதும் செய்திலர்[1]. உமாபதி சிவத்திற்குப் பின் அடுத்தடுத்து வந்த ஞானாசிரியர் எண்மருள் நூல் செய்தார் மூவர்[2]. இம்மரபில் கமலை ஞானப்பிரகாசரின் மாணாக்கராக விளங்கித் தருமபுர ஆதீனத்தைத் தோற்றுவித்த குருஞானசம்பந்தர் அருளிய நூல்கள் எட்டு.[3] இவரும், இவரது வழிவந்த அருளாளர்களும், இவர்களிடம் ஞானோபதேசம் பெற்ற திருக்கூட்டத்து அடியார்களும் அருளிய நூல்கள்பல; இவற்றை ஆதீன அருள்நூல்கள் என்பர். இவற்றைப் பண்டார சாத்திரம் என்று கூறுதல் வழக்கம். சாத்திரம், தோத்திரம், புராணம், பிரபந்தம், கண்டனம் எனப்பலவகையாக இவை அமைந்தன.

## பல்வகை நூல்கள் :

தமிழகத்தின் சைவ சித்தாந்த மெய்ப்பொருள் வளர்ச்சி வரலாற்றில், முடிமணி நூலாகத் திகழ்வது மெய்கண்டாரின் சிவஞானபோதம் ஆகும். சிவஞான சித்தியார் தொடங்கிப் பலராலும் இயற்றப்பெற்ற ஞான நூல்கள் பலவும், சிவஞான போதச் செம்பொருளை ஏதேனும் ஒரு வகையில் விளக்குவன வாகவே அமைந்தன. தருமை ஆதீன அருள் நூல்கள் பலவும் இந் நோக்கில் எழுந்தனவே; குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பல தனித் தன்மை இவற்றிற்கு உள. தமிழ்ச் சிற்றிலக்கிய வரலாற்றில் புதிய இலக்கிய வகைகள் சில தோன்றுவதற்கு இவை உதவின.

திருக்கயிலாய பரம்பரைக்கே உரிய யோகநெறியை [4] ஒரு நூல் விளக்குகின்றது. எளிமையும் கொண்ட அரிய தோத்திர வடிவங்களைச் சில நூல்கள் வழங்கியுள்ளன. ஆதீன அருள்நூல்களின் சாத்திரத் தோத்திரக் கூறுகளும், தனித்தன்மைகளும், சமய இலக்கிய வரலாற்றில் இவை பெறும் சிறப்பிடம் முதலியனவும் முறையாக ஆய்தற்குரியன. இவ்வாய்வு, தருமை ஆதீனத் தமிழ் வளர்ச்சிப் பணிகளை மதிப்பிட்டறியப் பெரிதும் துணைபுரியும்.

## குருஞானசம்பந்தர் அட்டகம் :

ஆதீன அருள் நூல்களுள், ஆதீனக் குருமுதல்வர் அருளிய ஞான நூல்கள் தனிச்சிறப்பின. 'பண்டார சாத்திரம் முதல் தொகுதி' என்ற பெயரில் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரின் முன்னுரையோடு கி. பி. 1948 இல் தருமை ஆதீன வெளியீடாக வந்த நூலில் குருஞானசம்பந்தர் அருளிய எட்டு நூல்கள் இடம் பெற்றுள்ளன [5]. இவை 1. சிவபோகசாரம், 2. சொக்கநாத வெண்பா, 3. முத்திநிச்சயம், 4. திரிபதார்த்த ரூபாதி தசகாரியஅகவல், 5. சோடசகலாப் பிரசாத சட்கம், 6. சொக்கநாதக் கலித்துறை, 7. பண்டாரக் கலித்துறை என்னும் ஞானப்பிரகாசமாலை, 8. நவரத்தினமாலை என்பன. கி. பி. 1971இல் இவற்றைச் சித்திரப்பட விளக்கங்களுடன் 'குருஞானசம்பந்தர் அட்டகம்' என்ற பெயரில் திரு. சி. அருணைவடிவேல் முதலியாரின் ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு இவ்வாதீனம் வெளியிட்டுள்ளது [6]. இவற்றுள் சொக்கநாத வெண்பா, சொக்கநாதக் கலித்துறை, பண்டாரக் கலித்துறை, நவரத்தின மாலை எனும் நான்கும் தோத்திர நூல்கள் [7]. சிவபோகசாரம், முத்தி நிச்சயம், திரி பதார்த்த ரூபாதி தசகாரிய அகவல் எனும் மூன்றும் சித்தாந்த சாத்திரங்கள். சோடசகலாப் பிரசாத சட்கம் யோக நூலாகும். இவற்றுள் வெண்பா, கட்டளைக்கலித்துறை, அகவல், எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம் ஆகிய யாப்புகள் பயின்றுள்ளன. இவ்வெட்டு நூல்களில் மொத்தப் பாடல் தொகை 321. சில ஏடுகளில் மட்டும் காணப்படுவனவாகிய சிவபோகசாரம் மிகைப்பாடல்கள்5, சொக்கநாத வெண்பா மிகைப்பாடல்கள்-7, முத்திநிச்சயம் சிலப்பிரதிகளில் காணப்படுவனவாகிய மிகைப்பாடல்கள்-6, இவற்றையும் சேர்த்தால் பாடல்தொகை 339. [8]

## சொக்கநாத வெண்பா :

குருஞானசம்பந்தர் அருளிய சிவதோத்திர நூல்கள் இரண்டு. குருதோத்திர நூல்கள் இரண்டு. சொக்கநாத வெண்பாவும் சொக்கநாதக் கலித்துறையும் சிவதோத்திரங்கள், ஞானப்பிரகாச மாலையும், நவரத்தின மாலையும், குருதோத்திரங்கள். "கண்ணுக்கு

இனிய பொருளாக'' மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் தமது கரத்தில் எழுந்தருளிய பெருமானை மதுரையிலும், திருவாரூரிலும், தருமையிலும் தாம் பூசித்த காலங்களில் குருஞானசம்பந்தர் துதித்துப்போற்றிய நூறுநேரிசைவெண்பாக்களின் தொகுப்பிற்கே 'சொக்கநாதவெண்பா' எனப் பெயர் சூட்டப்பெற்றுள்ளது. ஆனால் தருமபுர ஆதீனத்தார் கி. பி. 1948 இல் வெளியிட்ட பண்டார சாத்திரம் முதல் தொகுதியில் 94 வெண்பாக்களே காணப்படு கின்றன. இவற்றிற்குத் திரு. ப. மு. சோமசுந்தரம் பிள்ளையின் ஆங்கிலமொழிபெயர்ப்பும் இப்பதிப்பில்உள்ளது [9]. கி. பி. 1971இல் வெளிவந்த 'குருஞானசம்பந்தர் அட்டகம்' என்ற ஆதீன வெளியீட்டில் 'தனிப்பாடல்கள்' என்ற தலைப்பில் 'சொக்கநாத வெண்பாவின் சிலபிரதிகளில் காணப்படுவன' என்ற குறிப்போடு 7 வெண்பாக்கள் அச்சிடப் பெற்றுள்ளன. இவற்றுள் இறுதி வெண்பாவான 'தண்டு வரும்' என்று தொடங்கும் வெண்பா இந் நூற்கு உரியதல்ல என்பது ஆதனைப்படிப்போர்க்கு உடன் விளங்கித் தோன்றும் [10]. எஞ்சிய ஆறு வெண்பாக்களும் சொக்கநாத வெண்பாப் பாடல்களே. இவற்றைத் தனிப்பாடல் என்று வேறு படுத்த அடிப்படை ஏதுமில்லை. எனவே, இவற்றையும் இணைத்தால் சொக்கநாத வெண்பா 100 நேரிசை வெண்பாக்களைக் கொண்ட சிறந்த தோத்திரமாக நிறையும்.

### திருவிளையாடல் செய்திகள் :

சொக்கநாத வெண்பாவின் 100 பாடல்களுள் 88 பாடல்கள் 'சொக்கநாதா' என்றே முடிகின்றன. எஞ்சிய பன்னிரண்டு பாடல்கள் பல்வேறு முடிபுகளைக் கொண்டுள்ளன. வெவ்வேறு இடங்களில், வெவ்வேறு காலங்களில் இவை பாடப்பெற்றன வாதலின் பாடல்களின் பொருள் தொடர்புகளும், பொருளமைதி யும் வெவ்வேறாகவே அமைந்துள்ளன. மதுரையில் சிவபெருமான் நிகழ்த்தியதாகத் 'திருவிளையாடல் புராணம்' விரித்துரைக்கும் வரலாறுகளில், பஞ்சமாபாதகம் தீர்த்தமை (5) சுந்தர பாண்டியனாக மதுரையை ஆண்டமை (7, 65) எல்லாம்வல்ல சித்தராய் வந்தமை (8, 66, 79) கால்மாறி ஆடியமை (44) பன்றியாய் வந்து பால் கொடுத்தமை (57) பழிக்கஞ்சியமை(94) அங்கம் வெட்டியமை (தனிப்பாடல்-3) போன்ற ஏழு செய்திகள் சொக்கநாத வெண்பாவில் இடம் பெற்றுள்ளன. மதுரை சொக்க நாதனின் அளப்பருங்கருணை, எல்லை காணமாட்டாத பேராற்றல், விருப்பு வெறுப்பற்ற திருவுள்ளம், உலகுக்கெல்லாம் தலைவனாகும் முதன்மை போன்ற பல்வேறு சிறப்பியல்களை இந்நூலில் பல்வேறு விளிகளால் முன்னிலைப்படுத்தி ஆசிரியர் போற்றுகின்றார். இத்தகு

விளிகள் 39 இந்நூலுள் இடம்பெற்றுள்ளன. இவை தமிழ் மற்றும் வடமொழிச் சொற்களாக அமைந்தன 11.

## உவமைகள்; சொல்லாட்சிகள் :

இறைவன் திருவருளையும், வினைவலிமையையும் உலகியல் கண்ணோட்டத்துடன் விரித்துரைக்கும் வண்ணம் இவ்வாசிரியர் எடுத்தாண்ட உவமைகள்பல, சாத்திர நோக்கில் அமைந்துள்ளன.

'வறிஞர்தமை ஒக்கவைக்கும் மன்னர் போல்' (6)

'எரிசுடுவ தல்லால் இரும்பு சுடுமோ' (14)

'ஓர் புருடன் காதல் கொண்டான் போல்' (19)

'எவ்விதையை மாக்கள் பயிர்இட்டார் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல் போல்' (52)

இத்தகு அரிய உவமைகளோடு, இந்நூலில் வரும் சொல்லாட்சிகள் பல புதியனவாக உள்ளன. நன்மை - தின்மை; நலம் - பொலம்; நன்கு - தீங்கு; நன்று - தீது என்பன அறிந்த எதிர்மறைகள். இந்நூலுள்

'எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்
நல்லாங்கு தீங்கிதென நாடறியேன்' (53)

எனவரும் 'நல்லாங்கு' என்பது புதிய சொல்லாட்சியாகும். பொல்லாங்கு என்பதன் மறுசொல்லாக இச்சொல் ஆளப் பட்டுள்ளது. இதுவன்றி மலச்சோறு (18) பரதேசி (64) தன்மதுரை (65) சிங்காரித்து (92) போன்ற சொல்லாட்சிகளும், பூரணம் (2) சட்டர் (4) பேசானுபூதி (9) ஆசா பசாசை (9) சிற்பரானந்தா (9) தற்பரா (9) சுகபூரணம் (16) தன்னியா (18) சிரகரா (63) போன்ற வடசொல் மற்றும் சொற்றொடர்களும் இந்நூலில் காணப்படுகின்றன.

## சாத்திரக் குறிப்புக்கள் :

உலகினர் செய்பிழைகளைத் தன்மேலேற்றித் தன்னிலை இரக்க மாகப் பாடுதல் திருமுறை ஆசிரியர்களிடம் காணப்படுவது. வாழையடி வாழையாக வரும் இந்நெறியில் வந்த குருஞான சம்பந்தர் பாடல்களில், தன்னிலை இரக்கத் தொடர்கள் பல உள. இவை எளிமையாகவும், இனிமையாகவும், சைவ - சித்தாந்த உண்மைகளை உணர்த்தும் திறத்தனவாகும்.

'என்னால் உனை அடைய வல்லேன்எனில் இடரில்
இந்நாள் அளவும் இருப்பேனோ' (7)

"உயிர்கள், இறைவன் திருவருள் துணையின்றித் தாமே பதிப் பொருளைச் சென்றடைதல் கூடாது' என்பதனை இத்தொடர் விளக்குகின்றது.

'இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரம்தா' (10)

என்பதனால், 'உயிர்கள் பெறத்தக்க பெரும்பேறு மீண்டும் பிறவாமையே' என்பது விளக்கப்பட்டுள்ளது.

'எப்போது மும்மலம்விட் டேறுவேன் பூரணமாய்
எப்போதுன் இன்பசுகத் தெய்துவேன்' (12)

'ஆணவக்கட்டுள் கிடக்கும் உயிர்கள், அதனைத் தகர்த்துக் கரை யேறி, அருட்கடலாகத் திகழும் இறைவன் கருணையிலே மூழ்கும் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளவே இப்பிறப்பு வாய்த் துள்ளது' என்பதை நினைவூட்டும் அரிய தொடர் இது. இவ்வாறான சாத்திர நோக்குடைய பகுதிகள் மேலும் பல இந்நூலுள் விரவி யுள்ளன [12].

## யாக்கையை இகழ்தல் :

உயிர் வளர்ச்சிக்கு உடலோம்புதல் பெரிதும் வேண்டுவது என்பர் திருமூலர் [13]. என்றாலும், அஃதொன்றையே குறிக் கோளாய்க் கொண்டு மற்றவற்றை மறந்து திருவருள் நாட்ட மிலராய் வாழ்வாரை இழித்துரைக்க அருளாளர்கள் தவறுவில்லை. யாக்கை நிலையாதது என்ற உணர்விலராய், அதனை ஓம்புவதையே வாழ்வாகக் கருதும்உலகினரைக் குருஞானசம்பந்தர் சொக்கநாத வெண்பாவில் பல்வேறிடங்களில் கடிந்து கொள்கிறார். இறைவனை அழகுசெய்து கண்டு மகிழாமல், தம்மையே அலங்கரித்துத் திரிவாரைத் தெருட்டுவான் வேண்டி,

'உன்னைச் சிங்காரித்து உனதழகு பாராமல்
என்னைச் சிங்காரித்து இடர்ப்பட்டேன்' (92)

எனப் பேசுகின்றார். பின் வந்த தாயுமானார் தம் பாடல்களில் பல விடங்களில் யாக்கை மேல் கொண்டிருக்கும் மனிதர் மோகத்தைப் பழித்துரைக்கின்றார்.

'மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பி ஐயோ
நின்னை மறக்கை நெறியோ பராபரமே' (814)

என்றாற்போன்று பல தொடர்களில் யாக்கை நிலையாமையைக் குறித்துக்காட்டி அவர் இடித்துரைத்துள்ளமை காணலாம்.

யாக்கையின் இழிவை இவ்வாசிரியர் 'புன்கட்டு தோல்' (2) 'காக்கைநரி ஞாளி கழுகு பருந்துக்கு இரையாம் யாக்கை' (4) 'அருவருப்பே மெத்தியிடும் ஆகம்' (23) 'துஞ்சப் பிணமென்னச் சுற்றத்தார் இட்டத்தார் அஞ்சச் சலிக்க அருவருக்க - கொஞ்ச முற வந்த தனு' (83) 'தேகாதி எல்லாம் சடம் பிணம் - பொய்' (85) என்றெல்லாம் வரும் தொடர்களால் அறிவுறுத்துகின்றார். தேகாபிமானமும், உலக மோகாபிமானமும் உடையார்க்குத் திருவருள் கூடாது என்பதனை,

' மோகாபி மானமின்னும் முற்றும் மறக்கவில்லை
தேகாபி மானம் சிதையவில்லை — ஓகோ
உனையடைந்தும் பாசம் ஒழியவில்லை கூடல்
தனையடைந்த சொக்கநா தா ' (43)

என விளக்குதல் சிறப்பாக அமைகிறது [14].

## இனிய பாடல்கள் :

சொக்கநாத வெண்பாவில் இடம்பெற்றுள்ள பாடல்கள் அனைத்துமே இனியன. சிலபாடல்கள் என்றும் நெஞ்சில் நிறைவன. சில மறவாது போற்றத் தக்கன.

' பேரன்பன் அல்லன்; பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் — பேரன்பு
காட்டியெனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா ' (48)

என்ற இனிய வேண்டுகோளும் [15],

' ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை — வேறெனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சி
சொக்கேநின் தாளே துணை ' (100)

என்ற இறைவன் அருள் நாட்டமும் [16],

'நீரிலே முழ்கினுமென் நித்தமருச் சிக்கிலுமென்
பாரிலே சுற்றிப் பணியிலுமென் - வேரிலே
உற்றிருந்தா லன்றோ உயிர்க்குறுதி ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா' 17

என்ற தற்சோதனை வெளிப்பாடும் நினைவுகூரத்தக்கன. இவ்வாறு ஆதீன அருள் நூல்களுள் சிறந்தவழிபாட்டு நூலாகச் 'சொக்கநாத வெண்பா' திகழ்கிறது.

## சான்றெண் விளக்கம்

1. சதமணிக்கோவை என்ற ஒரு நூல் இவரால் செய்யப் பட்டது என்பர். மு. அருணசலம், (தமிழ்ப் புலவர் வரலாறு - 6; ஸ்ரீ குருஞானசம்பந்தர், பக்-51) சி. அருணைவடிவேல் முதலியார் இக்கருத்தை உடன்பட்டிலர். (சித்தாந்தத் தெளிவியல்: பக். 26)

2. காழி. பழுதை கட்டிச் சிற்றம்பல நாடிகள் (துகளறு போதம் முதலியன) காழி, பழுதை கட்டிச் சம்பந்த முனிவர் (சிவானந்தமாலை முதலியன) கமலை ஞானப்பிரகாசர் (சிவபூசை அகவல் முதலியன) ஆகிய மூவர்.

3. தஞ்சை சரஸ்வதி மகாலில் உள்ள 'சிவபூசா பத்ததி' என்ற அச்சிடப்படாத உரைநடை நூல் ஒன்றைக் குருஞான சம்பந்தர் இயற்றியதாகக் கூறுவர். மு. அருணசலம் (தமிழ்ப் புலவர் வரலாறு - 6: ஸ்ரீ குருஞானசம்பந்தர் பக். 47, 48)

4. 'பிராசாத யோகம்' என்று இதனைக் குறிப்பர். இதனை விளக்கும் நான்கு நூல்கள் உண்டு. இவை 'பிராசாத நான்மணிகள்' எனவழங்கப்பெறும். தருமை ஆதீனம் இவற்றைத் தொகுத்து அச்சிட்டுள்ளது.

5. தருமை ஆதீன வெளியீடு, எண். 160; கி. பி. 1948.

6. தருமை ஆதீன வெளியீடு, எண். 626; கி. பி. 1971.

7. சொக்கநாத வெண்பா, சொக்கநாதக் கலித்துறை இரண்டும் சிவதோத்திரங்கள், ஞானப்பிரகாச மாலையும், நவரத்தினமாலையும் குருதோத்திரங்கள்.

8. மு. அருணாசலம் பாடல்தொகை 334 எனக் குறித்துள்ளார். (தமிழ்ப் புலவர் வரிசை - 6; ஸ்ரீ குருஞானசம்பந்தர்: பக். 18) இது பிழை. அவர் குறிக்கும் தருமை ஆதீன வெளியீட்டில் (எண். 626 1971) 339 பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

9. பாடல் கருத்துக்கள் பெரும்பாலான பகுதிக்கு ஆங்கிலத்தில் உரைநடையாகவும், சில பாடல்களுக்கு மட்டும் கவிதை நடையிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

10. இதில் வரும் 'குண்டு வரும்' என்ற தொடர் வெடி மருந்துகள் போர்களில், பயன்படுத்தப்பட்ட காலத்ததாகத் தெரிகிறது. இரண்டாம் அடியில் வெண்பா தளை பிறழ்ந்து வருகிறது.

11. இரா. செல்வக்கணபதி 'சொக்கநாத வெண்பாவில் காணப்பெறும் சிவபெருமான் பற்றிய விளிகள்': ஞானசம்பந்தம் மலர் - 36, இதழ் - 1, பக். 31 - 35.

12. சொக்கநாத வெண்பா: பாடல்-14,26,62.

13. திருமந்திரம்: பாடல்-724, 725.

14. சொக்கநாத வெண்பா: பாடல்-43.

15. சொக்கநாத வெண்பா: பாடல்-68.

16. சொக்கநாத வெண்பா: பாடல்-94.

17. சொக்கநாத வெண்பா: பாடல்-75.



# முத்தி நிச்சயம்

## ( சிற்றுரை )

சைவசித்தாந்தக் கலாநிதி

திரு. தி. ந. இராமச்சந்திரன்

முத்திநிச்சயம் என்ற நூலை அருளியவர் தருமபுர ஆதீனத் திருமடாலய மகா ஞானபீடத்து முதற்குரவர் குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள். இவர்களது காலம் சுமார் 375 ஆண்டுகளுக்கு முன்பு என்பர்.

முத்தி என்பதை, ஊனடைந்த உடம்பின் பிறவி தானடைந்த உறுதியைச் சார்தல் என்று பொதுவகையாகக் குறிக்கலாம். இதை விளக்கும்போதுதான் ஒவ்வொரு கொள்கையரும் ஒவ்வொரு வகையாக விளக்கத் தலைப்படுகின்றனர்.

சமயப் பொறை என்னும் கருதுகோளிற்குத் தக்க மதிப்புத் தருவது சைவசித்தாந்தம். புறச் சமயங்கள் சிவபெருமானால் சோபான முறையில் கூறப்பட்டன என்ற கருத்தை ஏற்கும் அற்புதச் சமயம் சித்தாந்த சைவம். ''புறச் சமய நெறி நின்றும்'' என்று தொடங்கும் சிவஞான சித்தியார் சுபக்கச் செய்யுள் இதற்குச் சான்றாகும்.

" இணையி லிரும்பூளை யிடங்கொண்ட வீசன்
அணைவில் சமண்சாக் கியமாக் கியவாறே "

என்பது ஆளுடைய பிள்ளையார் அருள் வாக்கு.

" விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம்செய்து
எரிவினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும் "

என்பது வாகீச வேதம்.

" தொன்னூற் பரமசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத் தெரிந்து நாட்டுவித்து "

என்பது கந்தர்கலிவெண்பா.

சமயங்கள் பலவாகக் கிளைத்துவிட்டபடியால், முத்தியும் பலவகையாகக் கூறப்பட்டு வருகிறது. இதன் விளைவு மலைவாகும். மலைவிற்கு அமைவு அருளாலே, குருபிரானின் கருத்தும் கடமையும் ஆம். இவ்வடிப்படையில் அவதாரமான அருள் நூலே முத்தி நிச்சயம். குருஞானசம்பந்த சுவாமிகள் காலத்தே சிவசமவாதம் தலையெடுத்து ஓங்கிற்று. இதே காலத்தில்தான் ஆன்மானந்த வாதம் என்ற மதமும் உண்டாயிற்று. ஆன்மானந்த வாத மதத்தைப் பரப்பி வந்தவர் கண்கட்டி மறைஞானப் பண்டாரம் என்பவர் ஆவார். ஆன்மானந்தம், சிவசமவாதம் என்னும் இருமதமுத்திகளை மறுக்கு முகத்தான், ஏனைய மத முத்திகளையும் மறுத்தமை குறிப்பாற் காட்டி, முடிந்த பேரின்ப முத்தியாகிய சித்தாந்த முத்தியை இந் நூல் மூலம் அருளி உபகரித்தனர் குருஞானசம்பந்த சுவாமிகள். சித்தாந்த முத்தி அத்துவித முத்தி என்றும், பரமுத்தி என்றும், சாயுச்சிய முத்தி என்றும், சிவானந்த முத்தி என்றும் சொல்லப் படும்.

இந்நூல் இருபத்து இரண்டு வெண்பாக்களான் ஆயது. தெளிவின் பெட்டகம். ஞான வாரிதி. அனுபூதிப் பனுவல். இந் நூலுக்குச் சிற்றுரையும் பேருரையும் கண்டவர், தருமை ஆதீன அடியார் குழாத்துள் ஒருவராகிய வெள்ளியம்பலவாண முனிவர் என்பார். காசிவாசியாக இருந்தவர். குமரகுருபர சுவாமிகளிடத்துப் பயின்றவர். சிவப்பிரகாச சுவாமிகளுக்கும் அவருடைய சகோதரர் களாகிய வேலைய சுவாமிகளுக்கும் கருணைப்பிரகாச சுவாமிகளுக்கும் பேரிலக்கணம் கற்பித்த போதகாசிரியரும் இம்முனிவரே. தென் சொல் கடந்து வடசொற்கு எல்லை தேர்ந்தவர். ஓங்கி ஆழ்ந்து அகன்ற புலமையும் நுட்பமதியும் வாய்ந்தவர். 'ஞானாவரண விளக்கம்' என்ற பாடியம் வரைந்தவரும் இவர்தாம்.

20 அடிகள் கொண்ட சிறப்புப் பாயிரம் ஒன்று முத்தி நிச்சய நூலுக்கு ஓர் அணி எனத் திகழ்கிறது. இவ்விருபத்து இரண்டு அடிகளுக்கான விளக்கம் 32 பக்கம் பரந்து கிடக்கிறது. இவ்விளக்கம் வேதாகம சாரம் என்று போற்றும்படி அமைந்துள்ளது. உரை ஆசிரியரின் பரந்து பட்ட நுண்ணறிவு அங்கங்கும் பளிச்சிடுகிறது. செம்மாந்த நடையோடு இயங்கும் பெற்றித்து இவரது தமிழ். கற்கக் கற்கக் களிப்பூட்டுவது.

சித்தாந்த முத்திக்குரிய நாயன்மாரின் பெருமையைப் போற்ற அவதரித்த திருத்தொண்டத் தொகை 88 அடிகளில் அமைந்தது போல் அவர்கள் உற்ற முத்தியின் தன்மை இத்தகையது என்பதை நிச்சயிக்க வந்த இந்நூலும் 88 அடிகளில் அமைந்துள்ளமை அறிந்து போற்றப் பட வேண்டிய அருட் செய்தியாகும்.

தம்முடைய குரு நாதராம் ஞானப்பிரகாச தேசிகரை வணங்கி நூலை இயற்றத் தொடங்குகிறார் குருஞானசம்பந்த சுவாமிகள். குருநாதரின் திருவடிகளைத் 'தார்மேவு சேவடிகள்' என்று போற்றுகிறார் நூலாசிரியர். இதற்கு இங்ஙனம் உரை காண்கின்றார் உரை ஆசிரியர். '' அடியார் அல்லும் பகலும் அர்ச்சித்தலின் இடையறவு படாது மாலை சூழ்ந்து கிடக்கும் அடி யென்பார், 'தார்மேவு சேவடி' என்றார். மேவு என்பது மேம்பாட்டிற்கும் பெயராகலான், தார்மேவு என்பதை உம்மைத் தொகையாகக் கொண்ட தாரும் மேம்பாடும் பொருந்திய அடி என்றலுமாம். அடிக்கு மேம்பாடு, அடைந்தாரைப் பின்பு முன்போற் பிறவிக் கடலுள் வீழாது காத்தலால் உண்டாகும் மேன்மை. ''

'குருபாதம்' என்றேத்திய பின்னரே எப்பணியும் தொடங்கும் இவ்வாதீன மரபே மரபு! இந்நூலின் இரண்டாம் பாடலில், நூலாசிரியர்,

'' எந்த முத்தி சித்தாந்த மென்றார்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம் ''

என்று அருளியுள்ளார்கள். பரம ஆப்தராலும் அவர் பிரமாணங்களாலும், பலவாப்தர்களாலும் அவர் பிரமாணங்களாலும் நிச்சயிக்கப் பட்டது சிவானந்த அநுபவ முத்தி ஒன்றே என்பதை உரையாசிரியர் தெளிவுபடுத்துகிறார்.

மூன்றும் பாடலுக்கான உரையில், உரையாசிரியர் "பாசத்தோடு கூடின், அதனை அநுபவித்துக் கொண்டு பாசமாய் நிற்றலும், சிவத்தோடு கூடின் அதனை அநுபவித்துக் கொண்டு சிவமாய் நிற்றலுமே அதன் (ஆன்மாவின்) இயல்பு. தனக்கென ஓரியல்பு அதற்கில்லை'' என்பதை ஐயந்திரிபுகளுக்கு இடமின்றிக் காட்டியுள்ளார்.

தன்னைத்தான் ஆசைப்படுதலும் அநுபவித்தலும் சாலாது என்பதே நான்காம் பாடலின் கருத்து என்று தாபிக்கிறார் உரை ஆசிரியர்.

சிற்றின்பம் பேரின்பம் எத்தன்மையன எனவிளக்கும் ஐந்தாம் பாடலுக்கான உரையில், "சிற்றின்பத்தை ஆராய்ந்து பார்த்தால் புண்ணிய பலமான சூக்கும கன்மம் விளங்கும்" என்றும், அது சிவகுணமன்று என்றும், உரையாசிரியர் காட்டுகிறார். காட்டவே, புணர்ச்சிக் காலத்து இருவரிடத்தும் நிகழ்ந்த வின்பம் அவரவரது ஆனாற்போல் சமாதிக்காலத்து நிகழ்ந்த வின்பம் என்னது ஆதல் வேண்டும் என்ற ஆத்மானந்தவாதியின் கூற்று அர்த்தமற்றது என்பது விளக்கம்.

ஆறும் பாட்டின் உரையுள் ஆன்மானந்த வாதியின் கொள்கை அநுமானப் பிரமாணத்தால் அறிந்தஒன்றே அல்லாது சாக்ஷாத்கார மாகக் காணப்பட்டது அன்று என்று நிலை நிறுத்துகிறார். சொல் மாத்திரையான் அறிந்ததன்றிக் கண்கூடாக அறியாமையின், இவன் பெத்தனாகவே முடிகிறான் என்பது தேற்றம்.

ஏழாம் பாடலில் நூலாசிரியர்,

"பெறுவானீ யானந்தம் பேறென் றுரைத்த
தறியா திருந்தனைநீ யாம்"

என்று அருளியுள்ளார். இதனை இங்ஙனம் விளக்குகிறார் உரை ஆசிரியர் : "ஆன்மாப் பெறுவான் ஆனந்தம் பேறு என்று வரும் பிரமாணங்களை நீ அறியாது மறந்தனையோ! ... பெறுவான் பேறு என்னுஞ் சொல்லியல்பானும், கிடக்கை முறையானும் அவைதாம் வெவ்வேறு என்பது தெற்றென விளங்கும்...."

"உன்னுருவங் கண்டிருப்ப தோகெட்டேன் முத்திசிவன்
தன்னுருவங் கண்டிருக்கத் தக்கதே"

என்பது பாடல் எட்டின் சாரம். இதை, உரையாசிரியர், "(நின் போல் தோன்றி இன்பம் நின் குணமாகலால் குணகுணிகள் வேற்றுமையின்மையின், அது நீயே யாகலின்) நின்னைத்தானே கண்டிருப்பது முத்தியன்று. (இனி எவ்வாறு இருப்பது முத்தி யெனின்), சிவனுருவத்தைப் பார்த்து அநுபவித்திருப்பதே முத்தி" என்று அற்புதமாக விளக்குகிறார். இங்கு உன்னுருவம் என்றது ஆன்ம சொரூபத்தை என்றும் குறிப்புத் தருகிறார். ஆன்மசொரூபம் முத்திநிலை அன்று.

இவ்விடத்தில் ஆன்மானந்தவாதந்தான் யாது, என்று அறிந்து கொள்ளுவோம். முத்தி நிச்சய நூலைச் சிற்றுரையோடு அச்சிற் கொணரப் பணித்தருளியவர்கள் தருமை ஆதீனத்து 24 ஆவது குருமகா சந்நிதானம் ஆவார்கள். நூலைப் பரிசோதித்துக்

குறிப்புரை எழுதியவர் சிவஸ்ரீ சுவாமிநாத பண்டிதர் அவர்கள். ஆன்மானந்த வாதம் என்பதற்குப் பண்டிதர் விளக்கம் வருமாறு: "ஆன்மாவிற்கு இயற்கையாக ஆனந்தம் உண்டென்றும் அது மலத்தால் தடைப்பட்டது என்றும், அம்மலம் நீங்க, அவ்வானந்தம் வெளிப்பட்டுத் தோன்ற, அதனை ஆன்மா அநுபவிக்கும் என்றும் கூறும் மதம். வாதம் – கூறுதல், தர்க்கித்தலுமாம்."

ஆன்மானந்த வாதிகள் சைவ சித்தாந்த நெறிவழியே படர்ந்து வந்தும், முடிவு நிலையில் விலகிப் போய்விட்டவர்கள். இது நனி சால வருந்தத் தக்க விடயமாம். நல்வழி பற்றிப் பயின்று வந்தும், பலன் அடையாது கெடும் இவர்களுக்கு நல்லறிவு புகட்டவே முத்தி அருளப்பட்டது. இதை ஒன்பதாம் பாடல் எடுத்துக் காட்டுகிறது.

" ஈசனையே காண வெனத்தவமுன் செய்ததெல்லாம்
மோசமாய் வந்து முடிந்ததே—பாச
வினையகன்ற போதும் விமலனே நின்றருள்
தனையறியா மூடர்க்குத் தான். "

மும்மலம் அகன்ற போதும், பெத்த நிலை கடந்த போதும், முடிவு காண முடியாமல் போனது மோசமே. செய்த தவமெல்லாம் விழலுக்குப் பாய்ச்சிய நீராயிற்று. ஐயகோ! என்னெப்பது!

இந்நிலையை விளக்க உரையாசிரியர், சிவஞான சித்தியார், பரபக்கச் செய்யுள் எட்டின் ஒருவரியைப் பயன்படுத்துகிறார். அவர் கூறுவதாவது: "எனவே, கனகவரை குறித்துப் போய்க் கடற்கே வீழ்ந்த வாறாயிற்று. ஆகவே, தான் பெற்ற சாதனங்கள், சாத்தியத்தை யுண்டாக்க மாட்டாமையின், முன்னொரு பின் மலைவு முண்டாயிற்று என்பதாம்."

இந்நிலைநகைப்புக்குஇடம்தரும்என்று கொண்டஉரையாசிரியர் இப்படிக் கூறுகிறார். "இதனுனே முத்தனை பின்பு பெத்தரினும் அதிகமுடம் பெற்றமையான், மற்றப் பெத்தனுதலே சிறப்புடைத்து என்பதூஉம் தானே போந்தது."

இவ்வின குணம் எஞ்சிய நிலை, பத்தாம் பாடலில் நன்கு சுட்டப் படுகிறது. இப்பாடலுக்கான உரையில், "நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்" என வரும் திருவுந்தியார் மேற்கோளும், "கற்றதனுலாய பயனென்" எனவரும் திருக்குறள் மேற்கோளும் காட்டப்படுகின்றன. தவவினைவாகச் சிவம் தோன்றுமல் அவம் தோற்றிய அவலம் இங்கு அருளால் சாடப்படுகிறது.

அறிவில் தோன்றும் ஆனந்தம் என்ற ஒன்று உண்டு என்பது 'சுத்தப்பொய்' என்பதே பாடல் 11 இன் கருத்து. இவ்வுண்மையைச் சாத்திர - தோத்திர நூல்கள் கொண்டு நூலாசிரியர் நிறுவியிருப்பது ஓதி ஓதி மகிழத் தக்கது.

சிவானந்தம் என்பது சிவனார் வழங்குவது. அவ்வானந்தம் அவ்வான்மாவிற்கு உண்டு ஆகில், அது பலபிறவிகள் எடுக்க அவசியம் என்ன? இருளை ஓட்டுவது கதிரவனது ஒளியே; கண்ணொளி அன்று. இது பாடல் 12 இன் செய்தி. இதை விளக்க வந்த உரையாசிரியர் "ஆண்டவன் உயர்வும், அடியவன் இழிவும் ஆண்டவன் அடியவனை ஆளுந்திறமும், அடியவன் அவனால் ஆளப்படும் திறமும், 'பட்டப்பகல் போல வெட்ட வெளியாக விளங்குமாறு, எண்ணிப் பிறப்பிறப்பை யெய்துமோ என்று அவ்வாறு தெரிந்தார் என்று தெளிவுபடுத்திக் காட்டுகிறார்.

'சிவரூபமான பேரானந்தமே உபாசனையால் மலபந்த நிவிர்த்தி செய்து முத்தியில் தோன்றும்' என்று 13 ஆம் பாடல் உரையில் குறிக்கிறார்.

ஆன்மானந்தவாதி ஏகான்மவாதி யல்லன். புறம் போன படியால் சைவனு மல்லன். ஆகவே இவனை மாயாவாதியின் மகன் என்கிறார் ஆசிரியர். இது இவனுக்குப் புதிதாக இயற்றித் தரப்பட்ட பெயர் என்று உரையாசிரியர் 14 ஆம் பாடலில்இதை விளக்குகிறார்.

"இதனால் ஆன்மானந்தம் சிவானந்தமே யென்பதற்குக் காரணம் கண்டு வைத்தும் அங்ஙனம் கொள்ளாதானைப், பிறிதொரு மதத்தனாகவும் நிறுவிச், சைவத்திற்குப் புறம்பாகத் தள்ளுகின்றார்" என்பது 15 ஆம் பாடலுக்கான உரைப் பகுதி வழங்கும் தெளிவு.

ஆன்மானந்த வாதி, தனக்கு அநுகூலமாகக் கொள்ளும் வேதாந்தம், பிரமகீதை முதலியன ஆன்மாவிற்கு இன்பம் உண்டு என்று கூறுவதெல்லாம், பரமான்மாவாகிய சிவனுக்கே அஃதுண்டு என்னும் கருத்துப் பற்றியே. இது பாடல் 16 வழங்கும் செய்தி.

(16 ஆம் பாடல் பாட பேதத்துடன் காணப்படுகிறது. இரண்டிற்கும் தருமபுர ஆதீன வெளியீட்டில் விளக்கம் கிடைக்கின்றது.)

17 ஆம் பாடல் 'சிவசத்தியைப் புணர்தல்' பற்றி விளக்கம் தரும் பாடல். கவனமாகப் பயிலப்பட வேண்டிய பாடல். இதற்கு நீண்ட உரை அருளப் பட்டுள்ளது. பலப்பல மேற்கோள்கள் காட்டி உண்மை நிலையை உணர்த்துகிறார் உரையாசிரியர்.

ஆத்மானந்த வாதியின் மதம் 17 பாடல்களில் ஆராயப் படுகிறது.

சிவமே சச்சிதானந்தம். ஆனந்தம் சிவனுரது குணம். சீவன் முத்தர் என்பார், "மன்னைத் திளைத்து வாழ்வார்." மன் என்பதற்கு அரசன் என்று பொருள். இதை, "இங்கே எல்லா உலகிற்கும் அரசராகிய நடராசர்; தியாகராசர் என்க" என்று உரையாசிரியர் விளக்குகிருர். இச்செய்தி 18 ஆம் பாடலின் உரையில் காணக் கிடக்கின்றது.

சிவசமவாத நிராகரணம் பாடல் 19 இல் அருளப்பட்டிக்கிறது. ஆன்மானந்தவாத மத நிராகரணத்திலும் இம்மத நிராகரணம் உண்டு. ஆன்மானந்த வாதிக்கும் சிவசம வாதிக்கும் ஆன்மா சத்சித் ரூபியன்றிச் சச்சிதானந்த ரூபியன்று என்பதறிவித்து அம் மூன்று ரூபமும் ஒருங்குடையவன் முதல்வன் என்று விளக்குகிருர் உரையாசிரியர்.

பாடல் இருபதில், சமனதக் கொள்கை உண்மையாயின் தச காரியத்தில் பல காரியங்களும் வேண்டப்படா என்பது காட்டப் படுகிறது.

பாடல் இருபத்து ஒன்றில், சிவசமமே முத்தியெனில் சித்தாந்தம் அன்ரும் என்பது நிறுவப்படுகிறது.

பாடல் 22 பின்வருமாறு :

"உள்ள மலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே-கள்ளவிழ் பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு"

இப்பாடலுக்கு உரை வரையவந்த ஆசிரியர், "இதனுல், சித்தாந்த முத்தி யிஃதெனக் கூருது பிறன் கோள் சிதைத்தவாறே விடுப்பின், சிதையாததனேடு ஒக்கும் ஆகலான், அதனுல் "குன்றக் கூறல்" என்னும் குற்றம் பற்றுமாகலானும், அதனுல் முதற்கண் அந்த முத்தி நிச்சயிப்போம் என்றது பொய்யாய், "பொய்படுமொன்ருே புனை பூணுங் கையறியாப்பேதை வினைமேற் கொளின்" என்னு மிலக்கியத்தைப் புதுக்குவித்ததாய் முடியுமாகலானும் தமது உட்கோளாகிய சித்தாந்த முத்தியை இஃதெனக் கூறுகின்ருர்" என்று குறிக்கோள் நிறுவப்பட்ட சீர்த்தியை வியந்து போற்றுகிருர்.

இங்ஙனம் முத்தி நிச்சயம் நிறுவப்படுகிறது. சைவ சித்தாந்தத்தின் திட்ப நுட்பங்களைத் தெள்ளிதின் உணர்ந்தோரே முத்தி நிச்சயத்தின் அருமை பெருமைகளை நன்கு கற்றுணர முடியும்.

ஒரு சமயத்தின் பெருமை அது கூறும் முத்திநிலையில் பிரதிஷ்டையாகி இருக்கும். முடிநிலை பற்றிய தெளிவு இல்லாத சமயம் உண்மைச்சமயம் ஆகாது. இதுபற்றியே சைவசமயம் உலகில் ஒருதனிச் சமயம் என்று ஏற்கப் பட்டுள்ளது. சைவ சமயத்தின் மேல் ஒரு சமயம் இல்லை. தக்க காரணங்களுடனும், பிரமாணங்களுடன் இதை நிறுவிய நம் குருமார்களுக்கு நாம் என்றென்றும் கடமைப் பட்டு இருக்கிறோம்.

சைவர்கள் பால் குருஞானசம்பந்த சுவாமிகள் கொண்ட அன்பே நூல் வடிவம் உற்று அநுபூதி சித்திக்க வழிவகுத்து அருள்கிறது. இத்தகு நூலுக்கு மூல கிரந்தத்தின் உட்கிடை உணர்ந்த ஞானியே உரையிட ஒல்லும். அப்பெருந்தகுதி படைத்தவரே வெள்ளியம்பலவாண முனிவர்.

இவர் தமது சிற்றுரையில் 45 நூல்களினின்று மேற்கோள்கள் காட்டியுள்ளார். இந்நூல்களில் சில வருமாறு; பிரசிநோபநிடதம், நீலகண்ட பாடியம், சாந்தோக்கியம், கிரியா தீபிகை, சித்தியார், பெரிய புராணம், சிவதருமோத்தரம், ஞானசித்தி, சர்வஞானோத்தரம், திருவுந்தியார், சிவஞானபோதம், அரதத்த சிவாசாரியர் சுலோகம், திருக்களிற்றுப்படியார், சிவப்பிரகாசம், சங்கற்ப நிராகரணம், தருக்க சங்கிரகம், திருவருட்பயன், சிதம்பரச் செய்யுட் கோவை.

1934 ஆம் ஆண்டு முத்தி நிச்சயமும் சிற்றுரையும், தருமபுர ஆதீன வெளியீடாக, நூல் வடிவம் பெற்றது. இதில் மூல நூலின் ஆங்கில மொழி பெயர்ப்பும் தரப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் சிவஸ்ரீ ப. மு. சோமசுந்தரம் பிள்ளையாவார்.

மெய்கண்ட சாத்திரங்கள், பதினான்கும் ஓதி முடித்தவரே முத்தி நிச்சய நூலையும், அதற்கான சிற்றுரை பேருரைகளையும் முழுதும் பயன் கொள்ள முடியும் என்பது சான்றோர் கருத்து.



**பண்டார சாத்திரங்கள்:**

# முத்தி நிச்சயம்

## (பேருரை)

சைவசித்தாந்தக் கலாநிதி

திரு. தி. ந. இராமச்சந்திரன்

தருமபுர ஆதீனப் பண்டார சாத்திரங்களில் ஆணியாம் சாத்திரம் முத்திநிச்சயம். இதற்கு ஸ்ரீமத். வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் அருளிய பேருரை ஓர் உரையாணியாம்.

ஞானசம்பந்தம் - மலர் 47, இதழ் 5 இல் அச்சாகியிருக்கும் சிற்றுரை பற்றிய கட்டுரையின் தொடர்ச்சியாக இக்கட்டுரையை வாசித்தல் பயனுடையதாகும். ஏறத்தாழ 120 நூல்கள் பேருரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. தமிழ்ப் புலமையும், வடமொழியில் வல்லபமும், சாத்திர நுண் அறிவும் படைத்தாரே பேருரையின் முழுப் பயனைக் கொள்ள முடியும்.

இப்பேருரை 1946 ஆம் ஆண்டு தருமபுர ஆதீன வெளியீடாக வந்தது. சூரியனார் கோயில் ஆதீனத்தைச் சார்ந்த ஸ்ரீமத். இலக்கணம் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள், வேதாந்த சிரோமணி பிரமஸ்ரீ. இராஜகோபால சாஸ்திரிகள், வித்துவான் சிவஸ்ரீ. ச. தண்டபாணி தேசிகர் ஆகியோரின் அயராக் கூட்டு முயற்சியாலும், இவ்வாதீனத்து இருபத்துநான்கு, இருபத்து ஐந்து மகாசந்நிதானங்களாக விளங்கிய அருளாளர்களின் ஆசியாலும் சிறந்தமுறையில் இவ்வுரை வெளியிடப்பட்டது.

முதற்பாடலில் "திகழ் முத்தி நிச்சயம் ஒன்று ஆவதென மொழிவேன் நான்" என்பதை உரையாசிரியர் இப்படி விளக்கி அருளுகிறார். "பிறர் பன்றி, குட்டியிட்டாங்கு நூலிலக்கணமின்றிச் செய்த பல நூல்கட்கும்; 'அறிவிலானை அகத்தியன்' என்றும், 'பஞ்சதுட்டனைச் சாது' என்றும் பெயர் கூறுமாறுபோல, பரதிமிரபாநு, பதிபசு, பாசப்பநுவல், பரமோபதேசம் என்றுசில பெயர் கூறிச் சித்தாந்தம் அல்லாததை ஆமெனமயங்கிக்கொண்டு

வழங்கிஞரன்றே; அவ்வாறின்றிக் குஞ்சரமீன்ற கன்றெனை ஒன்ருய் முற்கூறிய நூலிலக்கணம் முழுவதும் உடைத்தாய் இருத்தலின் கதிரோனை ஆயிரங்கிரணன் எனவும், சந்திரனை அமுத கிரணன் எனவும், சிவனைச் சங்கரன் எனவும் பெயர் கூறுமாறு போல உள்ள காரணத்தான் இதற்கு இதுபெயராம் எனக் கண்டார்க்கு ஒத்து நிகழச் செய்தலின் ஒன்ருவதெனமொழிவேன் யான் என்றது" - இதிலிருந்து செய்யப்பட்ட நூலின் ஒரு தனிச் சிறப்பு நனி விளங்கும்.

இரண்டாம் பாடலுக்கான உரையில் மெய்கண்ட சந்தான வரலாற்றைச் சுருக்கமாகஉரையாசிரியர் அருளியுள்ளார். திருமூல தேவர்க்குச் சதாசிவமுனிகள் என்றபெயர் உண்டு என்று உரை ஆசிரியர் அறிவிக்கின்ருர். "ஆதியில் சநகரால் சம்பு சந்தானமும், மலையமான் சந்தானமுமாக இரண்டாய்ப் பின் பலவாகப் பரம்பிற்று" என்ற உரைச்செய்தி மிக முக்கியமானது. அதேபோல் சனற்குமாரரால் விஞ்ஞானதேவர் மெய்கண்ட தேவர் சந்தானம் இரண்டாய்ப் பின் பலவாயின.

இவ்வாறு சமயம் ஒன்ருகவும் சந்தானம் பலவாகவும் வருதலாற் பயன் என்ன? இதற்கு உரையாசிரியர் தரும் விடை வருமாறு: "ஏனைச் சமயங்கட்கு இஃதின்மையின் சிறப்புண்டாக லானும், ஆகமம் பலவாதலின் விதியும் விலக்கும் முத்தி நிலைகளும் பலவாகலின் அவ்வனைத்தும் அநுட்டித்து முடியாதாகலின், ஒன்று பற்றியே நடத்தற் பொருட்டு அவரவர் சந்தானத்திற்குரிய ஆகம வழியே நடந்து ஒழுக வேண்டுதலானும் பயன் உண்டு என்க."

பாடல் மூன்றுக்கான உரையில், ஆன்மாவிற்கு ஆனந்தம்இயல் பன்று; அதை வழங்குபவன் பதியே என்பதை நிறுவக் கீழ்வரும் ஆளுடைய பிள்ளையாரின் பாடலை மேற்கோளாகக் காட்டுகிருர்:

" கோல மாகரி யுரித்தவ ரரவொடு மேனக்கொம் பிளவாமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கர ஞர்தம்மைப்
போலத் தம்மடியார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை நில்லாவே "

அப்பர் அடிகள்: "தேனினு மினியர் பாலனநீற்றர்

" தீங்கரும் பனையர்தந் திருவடி தொழுவார்
ஊனயந் துருக வுவகைகள் தருவார் " (திருவிடைம. குறுந். 10)

என்று அருளியுள்ளதையும் சான்றாகக் காட்டுகிருர்.

பாடல் நான்கில், "உலகில் இரதமுடைப் பொருளெல்லாம் தனக்கு இனிமையாகாது பிறர்க்கே இனிமை பயத்தலானும்,

எத்துணை வல்லமையுடைய நாடகியாயினும் தன்கழுத்தில் தான் ஏறி நடிக்க மாட்டாமையின்" என்று எடுத்துக்காட்டிக், கிரியா விரோதத்தை நிறுவி ஆன்மானந்தத்தை மறுக்கிறுர் உரை ஆசிரியர். மேலும் "பருகத் தொலையாப் பரயோகந் தன்னை" ஊட்டுங் குருவே சிவன் என்றும் காட்டுகிறுர்.

ஆன்மானந்தம் என்ற கொள்கை சுவானுபவத்தைப் பகுத்தறிய மாட்டாமையின் விளைந்த மயக்கவுணர்வு என்று ஐந்தாம் பாடலின் உரையில் உரையாசிரியர் நிறுவுகிறுர். கொடுப்பான் சிவனே; கொள்வானே ஆன்மா. இதையே

" அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்ற தொன்று என்பால் "

என்றதிருவாசக உண்மைகொண்டும் சாதிக்கிறுர் உரையாசிரியர். ஆன்மா படிகம் போன்றது ஆதலாலே சார்ந்து பெற்ற குணம் ஆன்மாவினது அன்று என்று தெளிவுபடுத்துகிறுர்.

பாடல் ஆறுக்கான உரையில் சிவன் தந்த ஆனந்தம்தான் சீவனைப் பிரகாசிப்பிக்கும் என்று கூறி, அக்கருத்தை. "சிவப்ரத சிவாந்நத சிவயோகின் மகேஸ்வர" என்று வரும் ஞானசித்தி வாக்கினுல் துலக்குகிறுர். தன்னிடத்தில் தோன்றுமின்பம் தன் குணம் என்ருல் சிவசாக்ஷாத்காரங் கிடையாது என்று அடித்துக் கூறி, ஆன்மானந்த வாதியின் கூற்றை மறுத்துத் தள்ளுகிறுர்.

பாடல் ஏழு, "...... பேதாய் பெறுவான் நீ ஆனந்தம் பேறு என்று உரைத்தது. அறியாது இருந்தனை நீ " என்கின்றது. பெறுவான் ஆன்மா; ஆனந்தம்பேறு, என்றே பிரமாணங்கள் ஒருமிடறுகக் கூறுகின்றன. "அருளான ஆனந்தத் தாரமுதூட்டி" என்று இரண்டு இடங்களில் திருமந்திரமும், "பரம்பரமான பரம சிவாநந்தம்" என்று ஓர் இடத்தில் அதே திருமந்திரமும், "இனியன் தன்னடைந் தார்க்கு இடை மருதனே" என்று அப்பர் அடிகளும், "சேர்வார் தாமே தானுகச் செயுமவன்" என்று ஆளுடைய பிள்ளையாரும், "தேனங்கத்தமு தாகியுள்ளூறுந் தேசனை" என்று வன்ரெண்டரும், "திளைத்தற்கு இனியானை" என்று அவ்வன்ரெண்டர் அதேபாடலில் சுட்டுவதும், "இனிது அருள் பருக மாட்டா அன்பிலாதவரை" என்று அரதன வாக்கிய அடிகளும், "அருளை வாய் மடுத்துப் பருகுதோறமுத மொத்து" என்று திருவிசைப்பாவும் கூறுவன காட்டி மூலத்தின் கருத்தை மொய்ம்புற விளக்குகிறுர் உரை ஆசிரியர். சீவன்முத்தி நிலையில் உள்ள அநுபவம் பற்றிச் சித்தியார்,

"தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
றமனியத்திற் சமபுத்தி பண்ணிச் சங் கரனோ
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
யுடைந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்."

என்று கூறுகிறது. ஆனால் ஆன்மானந்த வாதியோ அந்நிலையில் "தன்னுருவம்கண்டிருப்பேன்" என்கிறான். இதுஎவ்வளவு பேதமை என்பதைத் தம்முரையில் நன்குபுலப்படுத்துகிறார் உரையாசிரியர். "சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்" என்ற உண்மையைத் தக்க ஆதாரங்களுடன் உரையாசிரியர் எட்டாம் பாடலுக்கான உரையில் விளக்கி நிறுவும் பெற்றி ஓதி ஓதி மகிழத் தக்கது.

ஒன்பதாம் பாடலுக்கான உரையில் ஆன்மானந்த வாதிக்குச் சாதன சாத்திய விரோதம் நிகழ்ந்தமை காட்டி உரையாசிரியர் அம்மதத்தை நிராகரிக்கின்றார். "ஈசனையே காண என தவம் முன் செய்தது எலாம் மோசமாய் வந்துமுடிந்ததே " என்பதுஎட்டாம் பாடலின் செய்தி. இதற்குக் கிடைக்கும் விளக்கம் பின்வருமாறு:

"ஈசனையே என்ற ஏகாரம் பிரிநிலை; முப்பொருளினுள்ளும் முத்தியிற்கண்டு அநுபவித்தற்கு விடயமாதல் சிவனிடத்த தாகலின் வேண்டும் என்பது அவாய் நிலையான் வந்தது அன்றி, என என்பதை இடைச்சொல்லாக்கிக் காணும் படியெனக் கிரியாவிசேடணம் ஆக்கினும் ஆம். "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்கு" (திருமுருகு) என்றாற் போல அன்றி என என்பதற்கு என்பதைக் கருதி எனப் பொருள் உரைப்பினும் அமையும். காண என்பது "சுடச் சுடரும் பொன் போல்" என்றாற் போல இருமுறைப்பட நின்றது அதன் விருப்பமிகுதி தோன்றற்கு. ஈண்டு மோசம் என்றது பயனின்மை குறித்து நின்றது; என்னை? முத்தியிற் சிவனைக் காணாமையின். அதனை யுத்தேசித்துச் செய்த வெல்லாம் பயன் தராமையின்."

தவம்என்பது கற்பனகற்று அநுட்டித்தல். அநுட்டிக்கப்படாத நிலையில் மகாப்பிரயோசனம் பறிபோகும். சித்தாந்தம் செப்பும் பரம முத்தியே மகாப்பிரயோசனம், ஆகுல நீர பிற.

ஆன்மானந்தம் உண்டு என்பானைக் குறிவழி உபாய நிலையால் நிராகரிக்கும் செய்தி பாடல் பத்தில் பகரப்பட்டிருக்கின்றது. எப்படி ஒருவன் ஆனந்தம் ஆன்மாவிற்கு இயல்பாக உண்டு என்று சொல்ல முடியும்? அப்படிக் கூறுவான், தான் சிவஞானம் பெற்றவனாகக் கூறினால் அக்கூற்று உண்மை அன்று. இதை உரையாசிரியர்:

"தான்அன்றி நிற்களமும் சச்சிதா நந்தனைநீ
யான்என் குணம்என் இடும்புஎன்னே"

என்பது, தன்னியல்பு தோன்ருது மழுங்க அவிழ்ச்சி கொடுத்துக் குழைந்திருக்கப் பெற்ருல் பெறப்படும் சச்சிதானந்த ரூபனுதலால் அவ்வுபாய நிலையானே சாட்சாத்காரம் பெற்றுழித் தான்முழுதும் தோன்ருது அவனே புலப்படத் தோன்றக் கண்டிருந்தும் என்ன காரணத்தால் அவனை யான் என்றும் என் குணம் என்றும் கூறும் முரண் உண்டானது? "ஊன நீ ஞானகுணம் பெற்று இன்னும் நான்நான் என நவிலும் ஈனதணம் போனது இலேயே" என்பது, அநாதியே பெத்தனுன நீ சிவகருணையான் ஒரோ வழிச் சிவஞானம் பெற்ற பின்பும் முன்போல் நான் நான் என நவிலும் முரண் உண்டாயிருத்தலான் நீ ஞானம் பெற்றதும் இல்லை; அதனுனே மலபந்தம் நிவர்த்தியானதும் இல்லையாதல் வேண்டு மென்றவாறு" என்று தெளிவித்திருக்கிருர்.

பாடல் பதினென்றுக்கான உரையில், "ஆகமம் முதலியன ஆநந்தபேதங் கூறும்வழி அபராநந்தம் பராநந்தமென விடயா நந்தத்தையும் பரமாநந்தத்தையுமே கூறியதன்றி ஆன்மாவிற்கும் ஆநந்த முண்டெனப் பேரின்பத்தை இரண்டாகப் பகுத்துக் கூருமையானும் ஆன்மாவிற்கு ஆநந்தம் இன்று என்பதே கொள்ளப்படும் என்க" என்று உரையாசிரியர் விளக்கி இதற்கு ஆதாரமாக அசிந்திய விசுவத்தில் சமாதிராஜ படலத்திலிருந்து மேற்கோள் காட்டுகிருர்.

ஆன்மாநந்தம் என்பது ஆன்மாவிற்குச் சிவனுர் வழங்கும் ஆநந்தம் என்று தான் பொருள். "சிவன் ஆநந்தரூபன் ஆகலின் அவனை ஒருவன் அநுபவத்து அறியவேண்டும்; பாசஞ் சடமாகை யால் ஆன்மாவே அநுபவித்து அறிவன்; அதனுல் அவனுக்கு அநுபவ உரிமை உளதாதல் பற்றிச் சிவன் கொடுப்பதும், அவன் பெறுவதுமாகக் கூறும் விவகாரத்தால் ஆன்மாநந்தம் என்று வழங்கப்படும்."

சிவனைப் போல் சீவனுக்கும் இயல்பாக ஆனந்தம் உண்டு என்ருல், சீவன் ஏன் பல் பிறவிப்பட்டு முடிவில் அவ்வானந்தம் பெற வேண்டும்? கண் ஒளியுடைப் பொருளாயினும் பேரொளி புடைத்த ஆதித்தனுக்கு ஈடாகுமா? 'ஆன்மாச் சிவனெடு சித்துருவத்தால் ஒத்திருப்பினும் ஆநந்தத்தால் ஒத்த நிலைமை இலன்." இதைப் பன்னிரண்டாம் பாடலின் உரைதெளிவு படுத்து கிறது. இப்பாடலுக்கு மிக விரிவான உரை வரைந்திருக்கிருர். வெள்ளியம்பலவாண முனிவர்.

பேரின்பம் ஆன்மாவின் குணமாகாது. காய்ச்சப்பட்ட இரும்பு தீயின் வேலையைப் புரியும். இங்குச் செயலை விளைவிப்பது தீயே அன்றி இரும்பன்று, சிவனும் சீவனும் சித்துப் பொருள்கள் என்ருலும், சிவன் அருட் சித்து, சீவன் அருளைச் சேரும் சித்து, அருளைச்

சேர்ந்து ஆன்மா பேரின்பம் துய்க்கும். இதுபதின்மூன்றும் பாடலுக்கான உரையில் அழகாக எடுத்துரைக்கப் பட்டிருக்கிறது.

அநாதியே தொடர்ந்துவரும் இருள்நீங்க, அப்போது பேரின்ப வடிவாய் வந்து கலந்து கோடலின் அதனைச் சிவ போகம் என்பர். அங்ஙனம் கூறுது அதை ஆன்மாநந்தம் என்பது பொருள் அற்ற வாசகம். பதினைந்தாம் பாடலின் உரை இதைத் தெளிவு படுத்துகிறது.

ஆன்மானந்தவாதி தன்மதத்திற்குப் பிரமகீதை, வேதாந்தம் போன்றவற்றை ஆதரவாகக் காட்டினுல், அது செல்லாது என்று பதினுறும் பாட்டின் உரை பகர்கின்றது. இங்கு, பேரின்பமே சாட்சியாயுள்ள பிரமம் என்று சங்கரர் தமது தச சுலோகியில் கூறியதை மேற்கோள்காட்டி, ஆன்மாநந்த வாதத்தை மறுக்கிறுர் உரையாசிரியர். சங்கரர் அருளிய ஆத்மபோதம், சிவதோத்திரம் திருக்குத் திருசிய விவேகம் ஆகிய நூல்களின் பகுதி சைவ சித்தாந்தக் கருத்துக்கு அரண் ஆவதைக் காட்டுகிறது. இப் பாடலுக்கு முனிவர் வரைந்திருப்பது அகல உரை. சங்கரர் கொள்கைகளை அவர் எங்ஙனம் துருவித்துருவிப் பார்த்துள்ளார் என்பதற்கு இப்பாடல் உரையே சரியான கரியாகும்.

"புசிப்போம் சிவபோகம்", "உள்ளமல நீங்கி யோங்கு சிவாநந்த வெள்ளந் திளைத்து" என்றெல்லாம் குருஞானசம்பந்தர் அருளியவற்றிற்கு இங்குத்தெளிவான விளக்கம்தருகிறுர் முனிவர். சிவன் "மங்கையோடிருந்தே யோகுசெய்வான்", "திளைத்தற்கினியான்" என்று காட்டுகிறுர். சிவாநுபவ முதிர்ச்சியை யறிவிக்கும் சொற்களைச் சரியாகப் புரிந்துகொள்ளாமற் போனுல் பாதகம் நேரிடும். ஆகவே பாடல்பதினேழுக்கான உரையை சர்வசாக்கிரதையாகக் கொண்டுசெலுத்துகிறுர் முனிவர். சிவசக்திகள் தன்மதன்மி பேதவிவகார நிமித்தந் தேவி தேவன் என இரண்டாகக் கூறப்படுவனவேயன்றி உண்மையில் பொருள் ஒன்றே. இவ்விரண்டன் ஒருமை சைவசித்தாந்த சாரம். சுந்தரரும், "தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமேயாய தலைவனுர்" என்று அருளியுள்ளார்.

"சிவசத்திதன்னைக்கண்டு ஆங்கு அருளாற் சச்சிதானந்தம்எனும்
மன்னைத் திளைத்து வாழ்வார்"

என்று பாடல் பதினெட்டு அருள்கின்றது. சிவனைப் பெற்றிருத்தலே முத்தி. சிவனே யவன் திருவடி ஞானத்தால் சேரச் செப்புவது" என்றும், "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பார்" என்றும், "அருள்தரு கை கொடுத்து ஏற்றும் ஐயாறன் அடித்தலமே" என்றும்,

"காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி"

ஏனாறும் வரும் அருள் ஞானவாசகங்கள் முன்சொன்ன செய்திக்கு அரண். இப்பாடல் உரையுள், (பக். 203), "இதனாலும் மறைஞான பண்டாரங் கூறுவன எல்லாம் முன்னூலில் இல்லாப்பொருள்களே யாம் என்பது கண்டுகொள்க" என்று முனிவர் உரை வரைந் திருப்பதினால், முத்தி நிச்சயம், அப்பண்டாரம் கூறியகொள்கையை மறுக்க அவதாரமான நூல் என்று தெளிவாகத் தெரிகின்றது.

சச்சிதானந்த ரூபனான பரமசிவனோடு சற்சித்து ரூபியான சீவான்மாவிற்கு முழுதுஞ் சமதை கூறும் சிவசமவாதத்தைப் பாடல் பத்தொன்பது நிராகரிக்கின்றது. ஆன்மானந்தவாத நிராகரணத்தாற் போந்தது உயிர் சற்சித்து ரூபி மாத்திரம் யெனவும், சிவசமவாதி எல்லாவற்றானுந் சமதை கூறுங்கால் ஆநந்தம் உண்டெனவும் கூறவேண்டு மன்றே! அவ்வாறன்றிச் சற்சித்து என்றும் தருமம் மாத்திரம் ஒத்தலின் ஒருபுடை ஒப்புமை யான் அன்றிச் சமதையும் கூடாது என்பதாம்.

அளவை நூல்களில் நல்ல தேர்ச்சியுடையாரே பேருரையைப் பயன் கொள்ள முடியும். முனிவர் கூறும் வாசகங்கள் அளவை நூல் பரிபாஷைச் சொற்கள் கொண்டு இயங்குவன. இப்பாடல் உரையில் அவர் கூறும்: "தீபாலோகம், பட்ச தருமம் பட்சத்தில் உண்டாதல், அந்வயவெதிரேகி அனுமானம், அசித்தி என்கிற ஏத்துவாபாசம், சபக்ஷசத்துவம், விருத்த வேத்துவாபாசம் விபக்ஷம், வியாவிருத்தி, அபாதிக விடயத்துவம், காலாத்திய யாபதிட்ட வேத்துவாபாசம், கிரியா விரோதம்" முதலிய சொற்களும் சொற்றொடர்களும் பெரும்பாலோர்க்கு விளங்கா. அளவை நூல்களில் நல்ல தேர்ச்சி உற்றோர் முனிவர் உரையைப் பொன்னே போல் போற்றுவர்.

ஆன்மானந்தவாதி மறுக்கப்பட்ட நிலையில், நிராகரணம் பண்ணப்பட வேண்டியது சிவசமவாதமே. இந்த நிராகரணம் பாடல் இருபதிற்கான உரையில் மிக விரிவாக மேற்கொள்ளப் படுகிறது. அசிதம், இரத்தினத் திரயம், அகோரசிவாசாரியர் அருளியவை, சுவாயம்புவம், மிருகேந்திரம், பவுட்கரம், சிவஞான போதம், சிவஞான சித்தியார், காமிகம், இரௌரவம், மதங்கம், கிரணம், மோக்ஷகாரிகை, சர்வஞானோத்தரம், சிவதருமோத்திரம், தத்துவப் பிரகாசிகை, திருமுறைகள், சிவப்பிரகாசம் போன்ற பல நூல்களிலிருந்து தக்க மேற்கோள்கள் உரையாசிரியரால் தரப் படுகின்றன. முனிவரின் கல்வியறிவு கடலன்னது. பகவத்கீதையின் உட்கிடையும் சைவசித்தாந்தமே என்றும் காட்டுகிறார். இப் பாடலின் உரையில் சம்ஸ்காரங்களின் உட்கிடையை வெளிப் படுத்துகிறார். தீட்சை பெற்றாரே ஓதவேண்டிய நூலிது. உரையி லிருந்து ஒரு நறுக்கு: "......புரோட்சணம் என்னும் விசேட

சம்ஸ்காரத்தான் முன்னர் ஞானசத்தி ரூபமான அர்க்கனுலே சுஷ்கமாகப் பண்ணிப் பச்சையை யுலர்ந்ததென வேறுபடுத்தினுற் போலச் , சடத்தைச் சிறிதென வேறுபடுத்தி நிர்மலமாக்கியும் தாடன விசேடத்தான் முன்னர்க் கிரியாசத்தி ரூபமான அக்கினி யால் தகித்து வேறு ஒன்று ஆக்கினுற் போல அப்பியுக்ஷணத்தாற் சடபாவம் போக்கிச் சிற்பாவத்தைக் கல்லிற் புலிங்கம்போல் வியத்தி பண்ணியும் இச்சாசத்தி ரூபமான சோமனுலே அமிர்தாப் பிலாவனத்தை சமாந்நியாகாரமாகப் பண்ணப்பட்டாற் போல ஆநந்ததர்மமான அமிர்தீ கரணம் பண்ணித் திரவிய முழுதுஞ் சிவரூபமாக்கினவாறு." இருபதாம் பாடலுக்கான உரை 73 பக்கங் கள். அதாவது இதுவே ஒரு தனிநூல் என்று கொள்ளவேண்டும்.

சிவசமமே முத்தி எனில் அது சைவசித்தாந்த முத்தி அன்றும். ஆகவே சிவ சமவாதி ஓர் ஏகதேச மதவாதியே அல்லாமல் சித்தாந்தி அல்லன். பாடல் இருபத்து ஒன்றுக்கு வரைந்த உரையில் சிவசமவாத பேதங்களை விளக்கி, இவர்களில் யாருமே சித்தாந்தி அல்லர் என்று நிறுவுகிறுர் முனிவர். ஆன்மானந்த வாதியும் ஒருவாற்ருன் இவர்களைப் போலச் சமதை கூறலின் அவனுக்கும் இந்நிராகரணம் ஒக்கும்.

சிவாகமங் கூறு முத்தியே சித்தாந்த முத்தியென முத்தி நிச்சயம் நிச்சயிக்கிறது. பாடல் இருபத்து இரண்டு கூறுவதாவது: "... கள்ளவிழ் பூங்கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற் சித்தாந்த முத்தியெனத் தேறு."

ஆன்மானந்த வாதம் சைவ பேதத்தும் இடம் பெறுமல் நிற்பது. ஆகவே கடியப்பட வேண்டிய ஒன்று. உள்ளது சிவானந்தமே. "சிவஞானமிருதம் பீத்வா விசரஸ்வ யதா சுகம்" என்று சர்வஞானேத்தரம் சாற்றுவதையே,

"கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே"

என்று சிவஞான சித்தியாரும் சாற்றுகிறது. பஞ்சதசியும், "தேனி னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்" என்பதை அநு சரித்து, "ரஸோப்ரம்ம ரஸம் லப்த்வா ஆநந்தீ பவதி நாந்யதா" என்று அறுதியிடுகிறது. நூலை முனிவர் இங்ஙனம் நிலைநாட்டுகிறுர்: "...... எனவே சிவாநந்தாநுபவமாவதே சைவசித்தாந்த முத்தி யென்பதற்கு முன்னர்ப் பாயிரத்தினுஞ் சந்தானநற் குரவர் என்னும் பாட்டினுங் கூறியவாறே, மூலாகமவுபாகம பிரகரண வேதாந்தபுராணமும், தமிழில் தொல் ஆசிரியர் செய்த திருமந்திர மாலை, சிவஞானபோத முதலிய சைவநூல்களும் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா,திருப்பல்லாண்டு, பிரபந்தக் கட்டளை, பெரிய புராணமும், பிறவும் பிரமாணமாக வந்தவாருயிற்று. ஆகவே பிறர்கோள் பிரமாணவத் தன்மையிற் சிதைந்த தூஉமாயிற்று. இந்நூலாற் போந்த பொருள் :

"வல்லான்கமலையின் ஞானப்ர காசன் வசனமுணர்ந்
தெல்லாம் வெறுமித்தை யென்றுகண் டேனின்ப வாரியுள்ளே
செல்லாமற் சென்றதைத் தேக்காமற் றேக்கித் தினந்தினமு
நில்லாம னின்றுகொண் டேனிது வேமுத்தி நிச்சயமே"

குருபாதமே துணை.

பண்டார சாத்திரங்கள் :

# சோடசகலாப் பிராசாத சட்கம்

## வித்துவான் திருமதி. ப. நீலா

பிறவிப் பெருங்கடல் கடக்கும் தோணியாக இறைவனடி அமையுமென்றால், அதனைப் பற்றும் வகை காட்டுபவர் பற்றற்றாராகிய துறவிகளே. அதனால்தான் பற்றுநெறிக்குப் பற்றுக பற்றற்றார் பற்றினை-என்று திருவள்ளுவர் துறவிகளின் பெருமையை அறிவித்தருளினார் என்பார் கி. ஆ. பெ. விஸ்வநாதம். அதற்கு முற்றிலும் பொருத்தமாகத் தவவேந்தராக விளங்கிய தருமை ஆதீனக் குருமுதல்வர் அருளிய எட்டு நூல்களில் இங்கு ஆயப்படுகின்ற 'சோடசகலாப் பிராசாத சட்கம்' நன்னெறிகாட்டும் விளக்காக - தவநெறிக்கு இட்டுச்செல்லும் தனிச்சுடராக இலங்குகிறது.

தோத்திரமும் சாத்திரமும் ஆக இறைவன் இருக்கிறான் என்பதனால் அவனை அறியும் நெறிகளும் இரண்டாக, தோத்திர நெறி – சாத்திர நெறி என அமைய வாய்ப்புண்டு. முன்னது இலக்கியம்; பின்னது இலக்கணம். முன்னது அன்புநெறி-பின்னது அருள் நெறி - முன்னது எளிமை; பின்னது அருமை. முன்னது இல்லறத்தாருக்கும் ஏற்றது; பின்னது ஐந்தவித்த ஆற்றலுடையாருக்கே பெரும்பாலும் ஆகும்.

இலர் பலராகிய காரணமும் இதுபற்றியே எழுந்தது. நோற்பார் சிலராக - பலர் நோலாதவராகப் போனார்கள். இது தவிர யோகம் – பற்றிய அமைந்த ஒரே நூல் இதுவாகும். தவவேந்தராம் குருஞான சம்பந்தரின் வாழ்வு இந்தத் தொடரில் பல இடங்களில் பயின்று வந்ததால் அந்தப்பகுதி இதில் இடம்பெறவில்லை.

இனி அவரியற்றிய இந்நூலின் அமைப்பை அதன் சிறப்புகளோடு காணலாம்.

## நூலமைப்பு :

இந்த யோகம் பிராசாத யோகம் எனப்படும். வடமொழியில் உள்ள 'பிராசாத ஷட்ஸ் லோகீ' என்ற ஆறு பாடல்கள் கொண்ட நூலை அடிநிலையாகக் கொண்டது.

ஏழு ஆசிரிய விருத்தங்களால் ஆன இதன் பொருள் சிவஞான கதியைத் தருவது என்பதாகும். ப்ரா - சிவஞானம், ஸா - கதி. த-தருவது.

பிரணவம் ஓம் என்பதை சமஷ்டி என்றும் அதுவே அகரம், உகரம், மகரம் விந்து நாதம் என ஐந்தாக - வியஷ்டியாகவும் அமையும். இக்கூறுகள் பிரணவ கலைகள் எனப்படும்.

பிரமன் தொழிற்படுத்தும் அகாரம் அகங்காரத்தையும், விட்டுணு இயக்கும் உகாரம் புத்தியையும், உருத்திரன் இயக்கும் மகாரம் மனத்தையும், மகேசுவரன் இயக்கும் விந்து சித்தத்தையும், சதாசிவன் இயக்கும் நாதம் புருடனையும் தொழிற்படுத்தி நிற்கும். இப்பிரணவ கலைகள் இன்னும் பன்னிரண்டாகவும் பதினாறாகவும் பகுத்து யோகமுறையில் தியானிக்கப்படும் அமைப்புதான் பிராசாத யோகம்.

## பெரியோர் வாக்கில் யோகநெறி :

திருமூலர் நான்காம் தந்திரத்தில் மேதாதி ஈரெட்டுமாகிய மெல்லியல் '(1070) என்று குறிப்பிடுவதை', † சீகாழி தத்துவப் பிரகாசர் தத்துவப் பிரகாசம் என்ற நூலில் பதினைந்து பாடல்களில் கூறியுள்ளார். திருக்களிற்றுப்படியாரில் திருக்கடவூர் உய்ய வந்த தேவர் 'மெய்ம்மைச் சிவயோகமே யோகம்' எனப் பாராட்டினர். இறைவனுடன் ஒன்றும் இவ்யோக நெறியைச் சிவஞான போதம் 'அவனே தானே யாகிய அந்நெறி - ஏகனாகி இறைபணி நிற்க -' என்று சுட்டும்.

கலைகள் பதினாறு கூறுகளும் திரிகலாப் பிராசாதம், பஞ்சகலாப் பிராசாதம், சத்தகலாப் பிராசாதம், அட்டகலாப் பிராசாதம், நவகலாப் பிராசாதம், தசகலாப் பிராசாதம், துவாதச கலாப் பிராசாதம், சோடசகலாப் பிராசாதம் எனப்பெயர் பெறும்.

---

† 'மேதாதி யீரெண்கலை செல்ல மீதொளிஓதா அசிந்தம் ஈதானந்த யோகமே'. 'விந்துவிலும் சுழிநாதம் எழுந்திட'. 'பந்தத் தலைவி பதினாறு கலையதா காக்கலு மாகுங் கலை பதினாறையும்'. — திருமந்திரம்.

## கலைகளின் வன்னமும் தானமும் :

1. நாபித் தானத்திலுள்ள அகாரகலை – அக்கினிக் கொழுந்து போன்றது.
2. இருதயத் தானத்திலுள்ள உகாரக்கலை - சந்திர சூரியருடைய ஒளி போன்றது.
3. கண்டத் தானத்திலுள்ள மகாரக்கலை-மின்னல்ஒளி போன்றது.
4. புருவ மத்தியிலுள்ள விந்துகலை - விளக்கின் ஒளி போன்றது.
5. நெற்றியின் நடுவிலுள்ள அர்த்த சந்திரகலை - வானிலை வெயிலில் வீசும் பிரபை போன்றது.
6. நெற்றியின் மேலுள்ள நிரோதினிகலை- புகைநிறம்போன்றது.
7. உச்சியிலுள்ள நாதகலை - மாணிக்கத்தின் ஒளிபோன்றது.
8. உச்சியின் பின்னுள்ள நாதாந்த கலை - மாணிக்கத்தின் ஒளி போன்றது.
9. துவாதசாந்தத்தின் அடியிலுள்ள சத்திகலையானது - இரண்டு மின்னலிடை ஒளிபோன்றது.
10. சத்தியின் மேலுள்ள வியாபினி கலையானது - நூறுயிர கோடி சூரியர் வட்டத்தின் ஒளிபோன்றது.
11. வியோமரூபினி என்னும் கலையானது -ஞானகாயம்போன்றது.
12. அநந்தை கலை – ஞானசமுத்திரம் போன்றது.
13. அநாதை கலை - ஞானக் கண்ணாடி போன்றது.
14. அநாசிருதை - நூறுயிரகோடி பூரணசந்திரபிரபைபோன்றது.
15. சமனைகலை - நூறுயிரங்கோடி சூரிய ஒளிபோன்றிருக்கும்.
16. உன்மனை – இருள்போன்றிருக்கும்.

இப்பதினாறு கலைகளும் நாபிமுதல் பன்னிரண்டங்குலம் இருந்துவிளங்கும். பிராசாதமாலையும் கலைகளின் வன்னத்தை எடுத்துக் கூறுகிறது. பிராசாத அகவலில் காவை அம்பலவாணத் தம்பிரான் இவைகளை இப்படியே எடுத்தாள்கிறார்.

நற்றழலின் கொழுந்துபய கதிர்மின்னு விளக்கு
 நண்ணும்வா னொளிபுகைமா ணிக்கமிரு மின்னு
உற்றொளிரு மிரவிநூறு யிரகோடி யுதய
 ஒளியன்ன தொகைவட்ட ஞான காயம்
அற்றமில்ஞா னவ்வாழி ஞானக்கண் ணாடி
 அவிர்நூறு யிரங்கோடி மதியொளியத் தொகையே
பெற்றதின கரவெயில்மேற் பேசவரு மிருளே
 பிறங்குந்தி முதல்முடிமேற் றுவாதசாந்தம் பெறுமே. 1

**கலைகளுக்கு அளவும் தானமும் :**

அங்குலநாலகரத்திற் குந்தி மீதே
யடுத்திடு மூன்றிற் கெட்டெட் டாயே நிற்குந்
துங்கமுள நாலினுக்கு மூன்று மூன்றுந்
துலங்கியவோ ரிரண்டினுக்கு நான்கு நான்காம்
தங்கியமே லொன்றுக்கு மூன்றே யாகுந்
தயங்கியமே லொன்றுக் கொன்றாகச் சாற்றும்
பங்கமிலா விவைகள்துவா தசாந்தமாகப்
பாங்குபெறு கலைகளெனப் பகருநூலே. 2

மூலாதாரமுதல் ஸ்வாதிஷ்டானம் ஈறாக,‡ பன்னிரண்டங்குலம் போக மேலுள்ள நாபியின் மேலே நாலங்குலம் ஆதார கலைக்குத் தானமாய், உகாரம் மகாரம் விந்து இம்மூன்றும் ஒவ்வொன்றுக் கெட்டங்குலம் தானமாய் இருக்கும்.

அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம் ஆகிய இந் நான்கு கலைகளுக்கும் ஒவ்வொன்றுக்கும் மூன்றங்குலந்தானமாய் நிற்கும். சக்தி - வியாபினிகலைகளுக்கு ஒவ்வொன்றிற்கும் நாலங்குலந் தானமாயிருக்கும். சமனை கலைக்கு மூன்றங்குலந் தானமாயிருக்கும். உன்மனை கலைக்கு ஓரங்குலந்தானம்.

இந்தப் பன்னிரண்டு கலைகளும் நாபி முதலாகத் துவாத சாந்தமளவாக இங்ஙனஞ் சொன்ன முறையிலே நிற்கும்.

**சோடச கலையின் வடிவு :**

1. அகார கலை வடிவு - அகரலிபி போன்றிருக்கும்.
2. உகார கலை - உகரலிபி போல.
3. மகாரக்லை - மகரலிபி போலிருக்கும்.
4. விந்து - விந்துத்துளி போன்றிருக்கும்.
5. அர்த்தசந்திரகலை - அர்த்தசந்திரன் போன்றிருக்கும்.
6. நிரோதினி கலை - மேலேயொரு முக்கோணமாய் இருக்கும்.
7. நாதம் - இரண்டுவிந்தும் நடுவிலொரு புள்ளியுமாயிருக்கும்.
8. நாதாந்தகலை - வலப்புறம் விந்து, இடப்புறம் கலப்பையுமா யிருக்கும்.

---

‡ பாடல் 10. ஞான. நாகலிங்கத்தம்பிரான்.

9. சத்தி - நடுவில் ஒருவிந்து இரண்டு புறத்திலும் இரண்டு விந்துவாக விருக்கும்.

10. வியாபினிகலையானது, திரிசூலமாய் முடியிலே இரண்டு விந்துமாய் இருக்கும்.

11. வியோமரூபினி. 12. அநந்தை. 13. அநாசிருதை.

14. அநாசிருதை கலைகள், நான்குதிக்கிலும் ஒவ்வொரு விந்துவாய் இருக்கும்.

15. சமனை - இரண்டு குச்சியின் மேல் இரண்டு விந்துவாயிருக்கும்.

16. உன்மனை - ஒருவிந்துவாக விருக்கும்.

அகரமுக ரம்மகரம் விந்து நல்ல
அர்த்தசந் திரனிவையவ் வடிவே யாகும்
புகலவரு முக்கோண மிருவிந்து நடுவே
பொருந்துமலம் விந்துவலம் நடுவே விந்து
தகவுடைய திரிசூல மிரண்டு விந்து
சாரும்வி யோ மாதிநால் விந்து நான்காய்
நிகழவரு மிருகுச்சி யிரண்டு விந்து
நீடுமொரு விந்துவென நிறுத்து நூலே. 3

## கலைகளின் தேவதை :

1-4. அகார - உகார - மகார - விந்துகலைகளுக்கு முறையே பிர்மா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் நால்வரும் தேவதைகள்.

4-8. அர்த்த சந்திரகலைக்கும் நிரோதினிகலைக்கும் நாதகலைக்கும் நாதாந்த கலைக்கும் சதாசிவமே அதிதேவதை.

8-10. சத்தி - வியாபினிகலைகளுக்கு ஆகதசிவமே அதிதேவதை.

10-14. வியோமரூபை அநந்தை ஆநாதை அநாசிருதை ஆகிய நான்கிற்கும் பரமசிவமே தேவதை.

14-16. சமனை உன்மனை இரண்டிற்கும் அநாகதசிவமே அதி தேவதை என்று பிராசாத சட்கம் விளக்குகிறது.

பிராசாத மாலையும்,

செங்கமலத் தயன்மேதை யருக்கீச கலைக்குத்
திருமாலாம் விடகலைக்குத் தெய்வமுருத் திரனும்
மங்குல்படி பொன்மகட்கு மணிமாடஞ் செறியு
மன்னுடையா னின்றதிரு மலரடிக் கீழ்வையே. (பா. 8.)

என்று கூறிச் செல்கிறது.

## நூலமைப்பு :

இந்த யோகம் பிராசாத யோகம் எனப்படும். வடமொழியில் உள்ள 'பிராசாத ஷட்ஸ் லோகீ' என்ற ஆறு பாடல்கள் கொண்ட நூலை அடிநிலையாகக் கொண்டது.

ஏழு ஆசிரிய விருத்தங்களால் ஆன இதன் பொருள் சிவஞான கதியைத் தருவது என்பதாகும். ப்ரா - சிவஞானம், ஸா - கதி. த-தருவது.

பிரணவம் ஓம் என்பதை சமஷ்டி என்றும் அதுவே அகரம், உகரம், மகரம் விந்து நாதம் என ஐந்தாக - வியஷ்டியாகவும் அமையும். இக்கூறுகள் பிரணவ கலைகள் எனப்படும்.

பிரமன் தொழிற்படுத்தும் அகாரம் அகங்காரத்தையும், விட்டுணு இயக்கும் உகாரம் புத்தியையும், உருத்திரன் இயக்கும் மகாரம் மனத்தையும், மகேசுவரன் இயக்கும் விந்து சித்தத்தையும், சதாசிவன் இயக்கும் நாதம் புருடனையும் தொழிற்படுத்தி நிற்கும். இப்பிரணவ கலைகள் இன்னும் பன்னிரண்டாகவும் பதினாறாகவும் பகுத்து யோகமுறையில் தியானிக்கப்படும் அமைப்புதான் பிராசாத யோகம்.

## பெரியோர் வாக்கில் யோகநெறி :

திருமூலர் நான்காம் தந்திரத்தில் மேதாதி ஈரெட்டுமாகிய மெல்லியல் '(1070) என்று குறிப்பிடுவதை', † சீகாழி தத்துவப் பிரகாசர் தத்துவப் பிரகாசம் என்ற நூலில் பதினைந்து பாடல்களில் கூறியுள்ளார். திருக்களிற்றுப்படியாரில் திருக்கடவூர் உய்ய வந்த தேவர் 'மெய்ம்மைச் சிவயோகமே யோகம்' எனப் பாராட்டினார். இறைவனுடன் ஒன்றும் இவ்யோக நெறியைச் சிவஞான போதம் 'அவனே தானேயாகிய அந்நெறி - ஏகனாகி இறைபணி நிற்க -' என்று சுட்டும்.

கலைகள் பதினாறு கூறுகளும் திரிகலாப் பிராசாதம், பஞ்சகலாப் பிராசாதம், சத்தகலாப் பிராசாதம், அட்டகலாப் பிராசாதம், நவகலாப் பிராசாதம், தசகலாப் பிராசாதம், துவாதச கலாப் பிராசாதம், சோடசகலாப் பிராசாதம் எனப்பெயர் பெறும்.

---

† 'மேதாதி யீரெண்கலை செல்ல மீதொளிஒதா அசிந்தம் ஈதானந்த யோகமே'. 'விந்துவிலும் சுழிநாதம் எழுந்திட'. 'பந்தத் தலைவி பதினாறு கலையதா காக்கலு மாகுங் கலை பதினாறையும்'.

— திருமந்திரம்.

**கலைகளின் வன்னமும் தானமும் :**

1. நாபித் தானத்திலுள்ள அகாரகலை – அக்கினிக் கொழுந்து போன்றது.
2. இருதயத் தானத்திலுள்ள உகாரக்கலை - சந்திர சூரியருடைய ஒளி போன்றது.
3. கண்டத் தானத்திலுள்ள மகாரக்கலை-மின்னல்ஒளி போன்றது.
4. புருவ மத்தியிலுள்ள விந்துகலை - விளக்கின் ஒளி போன்றது.
5. நெற்றியின் நடுவிலுள்ள அர்த்த சந்திரகலை - வானின் வெயிலில் வீசும் பிரபை போன்றது.
6. நெற்றியின் மேலுள்ள நிரோதினிகலை- புகைநிறம்போன்றது.
7. உச்சியிலுள்ள நாதகலை - மாணிக்கத்தின் ஒளிபோன்றது.
8. உச்சியின் பின்னுள்ள நாதாந்த கலை - மாணிக்கத்தின் ஒளி போன்றது.
9. துவாதசாந்தத்தின் அடியிலுள்ள சத்திகலையானது - இரண்டு மின்னலிடை ஒளிபோன்றது.
10. சத்தியின் மேலுள்ள வியாபினி கலையானது - நூறுயிர கோடி சூரியர் வட்டத்தின் ஒளிபோன்றது.
11. வியோமரூபினி என்னும் கலையானது -ஞானகாயம்போன்றது.
12. அநந்தை கலை – ஞானசமுத்திரம் போன்றது.
13. அநாதை கலை - ஞானக் கண்ணாடி போன்றது.
14. அநாசிருதை - நூறுயிரகோடி பூரணசந்திரபிரபைபோன்றது.
15. சமனைகலை - நூறுயிரங்கோடி சூரிய ஒளிபோன்றிருக்கும்.
16. உன்மனை – இருள்போன்றிருக்கும்.

இப்பதினாறு கலைகளும் நாபிமுதல் பன்னிரண்டங்குலம் இருந்துவிளங்கும். பிராசாதமாலையும் கலைகளின் வன்னத்தை எடுத்துக் கூறுகிறது. பிராசாத அகவலில் காவை அம்பலவாணத் தம்பிரான் இவைகளை இப்படியே எடுத்தாள்கிறார்.

நற்றழலின் கொழுந்துபய கதிர்மின்னு விளக்கு
　　நண்ணும்வா னொளிபுகைமா ணிக்கமிரு மின்னு
உற்றெளிரு மிரவிநூறு யிரகோடி யுதய
　　ஒளியன்ன தொகைவட்ட ஞான காயம்
அற்றமில்ஞா னவ்வாழி ஞானக்கண் ணாடி
　　அவிர்நூறு யிரங்கோடி மதியொளியத் தொகையே
பெற்றதின கரவெயில்மேற் பேசவரு மிருளே
　　பிறங்குந்தி முதல்முடிமேற் றுவாதசாந்தம் பெறுமே. 1

**கலைகளுக்கு அளவும் தானமும் :**

அங்குலநச் லகரத்திற் குந்தி மீதே
யடுத்திடு மூன்றிற் கெட்டெட் டாயேநிற்குந்
துங்கமுள நாலினுக்கு மூன்று மூன்றுந்
துலங்கியவோ ரிரண்டினுக்கு நான்கு நான்காம்
தங்கியமே லொன்றுக்கு மூன்றே யாகுந்
தயங்கியமே லொன்றுக் கொன்றாகச் சாற்றும்
பங்கமிலா விவைகள்துவா தசாந்தமாகப்
பாங்குபெறு கலைகளெனப் பகருநூலே. 2

மூலாதாரமுதல் ஸ்வாதிஷ்டானம் ஈருக,‡ பன்னிரண்டங்குலம் போக மேலுள்ள நாபியின் மேலே நாலங்குலம் ஆதார கலைக்குத் தானமாய், உகாரம் மகாரம் விந்து இம்மூன்றும் ஒவ்வொன்றுக் கெட்டங்குலம் தானமாய் இருக்கும்.

அர்த்தசந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம் ஆகிய இந் நான்கு கலைகளுக்கும் ஒவ்வொன்றுக்கும் மூன்றங்குலந்தானமாய் நிற்கும். சக்தி - வியாபினிகலைகளுக்கு ஒவ்வொன்றிற்கும் நாலங்குலந் தானமாயிருக்கும். சமனை கலைக்கு மூன்றங்குலந் தானமாயிருக்கும். உன்மனை கலைக்கு ஓரங்குலந்தானம்.

இந்தப் பன்னிரண்டு கலைகளும் நாபி முதலாகத் துவாத சாந்தமளவாக இங்ஙனஞ் சொன்ன முறையிலே நிற்கும்.

**சோடச கலையின் வடிவு :**

1. அகார கலை வடிவு – அகரலிபி போன்றிருக்கும்.
2. உகார கலை - உகரலிபி போல.
3. மகாரக்கலை - மகரலிபி போலிருக்கும்.
4. விந்து - விந்துத்துளி போன்றிருக்கும்.
5. அர்த்தசந்திரகலை - அர்த்தசந்திரன் போன்றிருக்கும்.
6. நிரோதினி கலை - மேலேயொரு முக்கோணமாய் இருக்கும்.
7. நாதம் - இரண்டுவிந்தும் நடுவிலொரு புள்ளியுமாயிருக்கும்.
8. நாதாந்தகலை - வலப்புறம் விந்து, இடப்புறம் கலப்பையுமா யிருக்கும்.

---

‡ பாடல் 10. ஞான. நாகலிங்கத்தம்பிரான்.

9. சத்தி - நடுவில் ஒருவிந்து இரண்டு புறத்திலும் இரண்டு விந்துவாக விருக்கும்.

10. வியாபினிகலையானது, திரிசூலமாய் முடியிலே இரண்டு விந்துமாய் இருக்கும்.

11. வியோமரூபினி. 12. அநந்தை. 13. அநாசிருதை.

14. அநாசிருதை கலைகள், நான்குதிக்கிலும் ஒவ்வொரு விந்துவாய் இருக்கும்.

15. சமனை - இரண்டு குச்சியின் மேல் இரண்டு விந்துவாயிருக்கும்.

16. உன்மனை - ஒருவிந்துவாக விருக்கும்.

அகரமுக ரம்மகரம் விந்து நல்ல
அர்த்தசந் திரனிவையவ் வடிவே யாகும்
புகலவரு முக்கோண மிருவிந்து நடுவே
பொருந்துமலம் விந்துவலம் நடுவே விந்து
தகவுடைய திரிசூல மிரண்டு விந்து
சாரும்வி யோ மாதிநால் விந்து நான்காய்
நிகழவரு மிருகுச்சி யிரண்டு விந்து
நீடுமொரு விந்துவென நிறுத்து நூலே. 3

## கலைகளின் தேவதை :

1-4. அகார - உகார - மகார - விந்துகலைகளுக்கு முறையே பிர்மா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் நால்வரும் தேவதைகள்.

4-8. அர்த்த சந்திரகலைக்கும் நிரோதினிகலைக்கும் நாதகலைக்கும் நாதாந்த கலைக்கும் சதாசிவமே அதிதேவதை.

8-10. சத்தி - வியாபினிகலைகளுக்கு ஆகதசிவமே அதிதேவதை.

10-14. வியோமரூபை அநந்தை ஆநாதை அநாசிருதை ஆகிய நான்கிற்கும் பரமசிவமே தேவதை.

14-16. சமனை உன்மனை இரண்டிற்கும் அனாகதசிவமே அதி தேவதை என்று பிராசாத சட்கம் விளக்குகிறது.

பிரசாத மாலையும்,

செங்கமலத் தயன்மேதை யாக்கீச கலைக்குத்
திருமாலாம் விடகலைக்குத் தெய்வமுருத் திரனும்
மங்குல்படி பொன்மகட்கு மணிமாடஞ் செறியு
மன்னுடையா னின்றதிரு மலரடிக் கீழிவையே. (பா. 8.)

என்று கூறிச் செல்கிறது.

மலரயன்முன் ஞல்வர்களு மாகுமுந்தி
மருவகர மாதியொரு நாலுக் கும்மேல்
இலகவரு நான்கினுக்குஞ் சதாசிவமே தெய்வம்
எழிலுடைய மேலிரண்டிற் காகதமாஞ் சிவமே
நலமுடைய நான்கினுக்கு நற்பரம சிவமே
நண்ணுமநா கதசிவமே நவிலரிய விரண்டிற்கு
உலகறிய வைந்துமுன் றிரண்டி ரண்டே
யுள்ளாகு மிரண்டி ரண்டிற்கொரு நான்குதானே, 4

என்று குருஞானசம்பந்தர் அருளினர்.

**கலைகளின் மலநிலை :**

மலங்கள் ஆணவம் கன்மம் மாயை என மூன்ருகவும் மாயையைக் சாரணமாயை என வைத்து அதன் காரியங்களை மாயேயம் என்றும், மலங்களின் சக்திகளை அவற்றின் வழியிலேயே நின்று தொழிற் படுத்துகின்ற இறைவனின் சக்தியைத் திரோதானசக்தி என்று — இதையும் ஒருமலமாக வைத்து மலங்கள் ஐந்து எனக் கூறுவர்.

மூலத்தி லோங்கார மசபைக் காக
மொழிவர்கா மிகமலமேல் முகிழ்க்கு முந்தி
யேலத்தான் மேவகர முன்னி ரண்டிற்
கிழுக்குமல மேவிரண்டிற் கிலகு மாயை
சீலத்தான் மேலிரண்டிற் றிகழ்மா யேயந்
திறலுடைய மேலிரண்டிற் சேர்மா மாயை
சாலத்தான் மேலிரண்டிற் றகுதி ரோதந்
தயங்கியமே லிரண்டிற்கா ணவமே சாற்றில். 5

மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும் — என்று அருணந்திசிவமும், 'மலம் ஐந்தென்பார் ஐந்தும் மாருதருளென்ப தரிதென்பர் அறிந்துளோரே' என உமாபதிசிவமும் குறிப்பார்கள்.

மணிவாசகர் இரண்டமைப்பிலும் கூறுகிருர்.

" மும்மை மலம் அறுவித்து "
"மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற்பொரு மத்தென "

மலமகற்றி மலரடிக்கீழ் வைக்கும் கடனும் இறைவனைச் சேர்ந்ததாகிறது.

கண்ணுதலான் தன் கருணையை உயிர்களிடமாகக் காட்டாத போது - எவர் அவனைக் காணமுடியும?

**மாத்திரையளவு :**

அகாரகலைக்கு மூன்றும், உகாரகலைக்கு இரண்டும், மகாரக் கலைக்கு ஒன்றும், விந்துக்கலைக்கு அரையும், அர்த்த சந்திர கலைக்குக் காலும், நிரோதினிக்கு அரைக்காலும், நாதகலைக்கு மாகாணியும், நாதாந்தகலைக்கு அரைமா அரைக்காணி மாத்திரையும், சக்தி கலைக்குக் காணி முந்திரி மாத்திரையும், வியாபினிக்கு அரைக்காணியின் கீழ் அரை மாத்திரையு மெனக் கணக்கிடுவர். இம்முறையில் வியோமரூபை முதலான ஆறுகலை களுக்கும் அதிற்பாதி அதிற்பாதி மாத்திரையாம்.

மகார கலைக்கு மேலே மாயேயம்; நாதகலை நாதாந்தகலைக்கும் சுத்த மாயை; சக்திகலைக்கும் வியோபினி கலைக்கும் திரோதமலம் பொருந்திநிற்கும். சமனைக்கும் உன்மனைக்கும் ஆணவமலம் பொருந்தி நிற்கும்.

**உயர் தெய்வ கதிகள் :**

மூலாதாரத்திலிருந்து விளங்கும் ஓங்காரத்திற்கும் அசபைக்கும் பிரதானமான காமிகமலம் சோதிக்கும் தாவரயோனி பதினாறு லக்ஷமும், நாபியிலே பொருந்தும் அகாரமுதலாக உன்மனை யந்தமாகப் பன்னிரண்டுகலையும் இவ்விரண்டையும் ஒவ்வொன்றாகப் பிரித்தால் ஆறுகூறாகும். முன்வகுத்த ஆறுகூற்றிலே முதற்கூறாகிய அகரமும் உகரமும் ஊர்வனவான யோனிகள் பதினைந்து லக்ஷமும் பிரகிருதி மலத்துடனே சோதனைப்படும். இரண்டாம் கூறாகிய மகரமும் விந்துவும் நீர்வாழ்சாதியான யோனி பத்து நூறாயிரமும் அசுத்த மாயையுடனே சோதனைப்படும். மூன்றாங்கூறாகிய அர்த்த சந்திரன் நிரோதினியும் பறவையான பத்து நூறாயிரம் சுத்த மாயா காரியமான மாயேய வஸ்துவுடனே சோதனைப்படும். நாலாங் கூறாகிய நாதமும் நாதாந்தமும் நாற்காலியான யோனி பத்து நூறாயிரமுஞ் சுத்த மாயையுடன், ஐந்தாம் கூறாகிய வியோமரூபினி சத்தி, வியாபினி யென்னுங்கலைகள் மானிடயோனி எண்பது நூறாயிரமும் திரோதான மலத்துடன் சோதனைப்படும். ஆறாம் கூறாகிய சமனை உன்மனை அநாதை அநாசிருதை தெய்வயோனி பதினாறு நூறாயிரமும் ஆணவ மலத்துடன் சோதனைப்படுமென்று ஆகமங்கள் கூறுகின்றன.

அரியமூ லாதார மதனின் மேவி
யவிருமோங் காரமெழி லசபைக்காகத்
தெரிவரிய யோனிதா பரமே யாகுந்
திகழவரு முந்தியின்மே லகர மாதிப்

பிரிவரிய விவ்விரண்டா யறு கூறுகிப்
பெறும்யோனி யூர்வனவு நீரில் வாழ்தற்கு
உரியனவும் பறவைகளு நாற்கான்மா னிடரும்
உயர்தெய்வ கதியுமென வுரைக்கு நூலே. 6

ஆதாரகலைக்குமேலே ஒருசூனியம் - நிரோதினிகலைக்கு மேலே ஒரு சூனியம், சத்திகலைக்குமேலே ஒரு சூனியம், வியாபினி கலைக்கு மேலே ஒருசூனியமும், சமனகலைக்குமேலே ஒருசூனியமும், உன்மனை கலைக்குமேலே ஒருசூனியமும் உண்டு என்று கூறுகிறார்கள்.

மூன்றகர இரண்டுகர மகரமொன்றே
முந்துவிந்து வரைபிறைகால் முக்கோண மரைக்கால்
ஆன்றமைந்த நாதமா காணிநா தாந்தம்
அரைமாமே லரைக்காணி சத்தியை முந்திரியை
யேன்ற வியாபினி யரைக்காணியின் கீழினரையே
யிம்முறை வியோமாதியரையரை மாத்திரையே
தோன்றுமக ரத்தின்மே னிரோதசத்தியின் மேல்
தோற்றும் வியாபினி சமனை உன்மனை மேற்சுன்னே. 7

மிகக்கடினமான அரிய வழக்காறுடைய இவ்வியோகம் இப்போது அறிவது சுலபமாக்வில்லை. இந்த யோகத்தைத் தருமையாதீன முனிபுங்கவர்கள் செய்துவந்ததாகச் சொல்வார்கள். ஆதீனத்தின் வழிபடு மூர்த்தியான ஸ்ரீ சொக்கநாதர் திருக்கோயிலின் பின்புறமுள்ள மாடங்கள் அவர்கள் இருந்து யோகம் பயின்ற இடமென்பர்.

இந்தப் பிராசாத யோகம் திருமூலர் திருமந்திர வழியில் விளக்கம் பெற்றும் விரிந்தும் பிரிந்தும் வந்த விதம் பிராசாத ஷட்கத்தாலும் பிராசாத மாலையாலும் அறியக் கூடுகிறது.

பனசைச் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்களின் பரிசுக் கட்டுரைகள் இக்கட்டுரைக்குப் பெரிதும் உதவின. தெளிவுபடாத இடங்கள் வல்லார்வாய்க் கேட்டுணரத் தக்கன என்ற அளவில் இது நிறைவெய்துகிறது.



# திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்

பேராசிரியர் முனைவர் திரு. கு. சுந்தரமூர்த்தி

இந்நூல் தருமை ஆதீன குருமுதல்வராய குருஞான சம்பந்தரால் அருளிச் செய்யப் பெற்றதாகும். நூலின் பெயர்க் காரணத்தை ஆராயின், இந்நூல் நுவலும் பொருளும் தெரிய வரும். திரிபதார்த்தம் - முப்பொருள்: இறை, உயிர், தளை என்பன. இம்முப்பொருள் உண்மையை அறிந்து, உணர்ந்து, தெளிந்து, விடவேண்டுவதை விடுத்து இணையவேண்டுவதுடன் இணைந்து இன்புற வேண்டுமாற்றைப் படிநிலையில் வைத்து இந் நூல் விளக்குகின்றது. இவ்வகையில் இம்மூன்று பொருள்களையும் அறியுங்கால் அவ்வவற்றின் ரூபம் முதற்கண் இடம் பெறுதலின் ரூபாதி எனக் கூறப்பெற்றது. ரூப ஆதி - ரூபம் முதலாக. அவை ரூபம், தரிசனம், சுத்தி என்பன. தசகாரியம் – பத்து வகைச் செயல்கள். அவை தத்துவ ரூபம், தத்துவ தெரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தெரிசனம், ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவ தெரிசனம், சிவ யோகம், சிவ போகம் என்பன. இவ்வாற்றான், இந்நூற்கண் கூறப்பெறும் பொருள், கூறப்பெறும் முறை, கூறப் பெறும் பொருளின் தொகை ஆகிய மூன்றும் விளங்குகின்றன. இவ்வாறாய பாடுபொருண்மை, அகவல் (ஆசிரியப்பா) வடிவில் அமைந்துள்ளது. ஆதலின் இந்நூல் 'திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்' எனப் பெயர் பெற்றது.

இப்பொருண்மையை நுவலவந்த நூல்கள்பல. அவற்றுள், சீர்காழி, தத்துவநாதரால் செய்யப்பெற்ற 'உண்மை நெறி விளக்கம்' குறிப்பிடத்தக்கதாகும். இதன்வழி எழுந்த நூல்களுள் இதுவும் ஒன்றாம்.

உயிர், முடிந்த பயனாக அடையத்தக்க பொருள் இறைவனே யாம். 'ஊன் அடைந்த உடம்பின் பிறவியே தான் அடைந்த உறுதியைச் சாருமால்' என்பர் சேக்கிழாரும். இவ்வாறு அப்பரம் பொருளை அடைதற்கு உயிர் திருவருள் துணை நிற்பத் தொழிற் படுங்கால், அதற்கு வரும் தடைகள் பல. அவை இருவகைப்படும்.

ஒன்று, தன்னைச்சூழ உள்ள பொருள்களால் ஆய தடை. மற்றொன்று, தனக்குத்தானே அமைந்திருக்கும் சில தடை. இவ்விரண்டினையும் தெளிந்து அவற்றினின்றும் விடுபட்டாலன்றி உயிர் முடிந்த பயனாய இறைவனை அடைதல் ஒல்லாது. இதனையே திருவள்ளுவனாரும், "சார்புணர்ந்து சார்புகெட ஒழுகல்" என்பர். உயிர் தான் சேர வேண்டிய பொருள் இறை. உயிர் தன்னைச் சார்ந்துள்ள பொருள் தளை. அது யான் எனது என்னும் முனைப்பால் வந்ததாம். இவற்றுள் யான் என்பது உயிர் தன் முனைப்பால் கொள்ளும் நினைவும் செயல்களுமாம். எனது என்பது உலகியல் சூழல்பற்றிக்கொள்ளும் நினைவும் செயல்களுமாம். இவையே அகப்பற்று, புறப்பற்று எனப்படும். உயிர் தன்னைச் சார்ந்துள்ள இவ்விரு குற்றங்களையும் நீக்கவும் தான் சேரவேண்டுவதாய இறைவனை அடையவும் திருவருள் வழி நின்று செயத்தகும் செயல்கள் பத்தாம். அவையே ஈண்டுத் 'தசகாரியம்' எனக் கூறுப்பெறுகின்றது. இப்பத்துச் செயல்களும் உயிர் படிப்படியாக உணர்ந்தும் தெளிந்தும் செய்து உயர்தற்குரியனவாம். அவை தத்துவரூபம், தத்துவதெரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதெரிசனம், ஆன்மசுத்தி என அறுவகைப்படும். இவற்றின் வழி இச்சார்புகளெல்லாம் நீங்கப் பெற்ற உயிர் இறைவனை அடையுங்கால் பெறும் அனுபவ நிலைகள் நான்கு வகைப்படும். அவை சிவரூபம், சிவக்காட்சி, சிவயோகம், சிவபோகம் என்பனவாம்.

இவ்வாறு செயத்தகும் செயல்கள் பத்தெனவே பலரும் கூற, இவ்வாசிரியர் தளைநீக்கத்திற்கெனச் செயத்தகும் செயல்கள் பத்தாகவும், உயிர் தன்னை உணரவும், சிவத்தை அடையவும் செயத்தகும் செயல்கள் பதினொன்றாகவும் வைத்து விளக்குகிறார். இவ்வருமை இந்நூற்கமைந்த தனிச் சிறப்பாகும். பத்துவகைச் செயல்களே 'தசகாரியம்' என்பபடும். ஆயினும் இறை, உயிர் ஆகிய இரண்டிலும் பதினொருபடிகள் இருப்பினும் அவையும் பத்துவகைச் செயல்கள் என்றே பெயர் பெறும். அது பதிகம் என்பது பத்துப்பாடல்கள் உடையது எனினும் பதினொருபாடல்கள் உடையனவும் பதிகம் எனப்படுதல்போலாம்.

## பாச தசகாரியம்

இப்பாசங்களை உணரவும் இயற்றினின்றும் விடுபடவும் கொளத்தகும் படிகள் பத்தாம். அவை: பாசசுபாவம், பாச வியாத்தி, பாசவியாபகம், பாசத்தின் குணம், பாசவிசேடம், பாச ரூபகம், பாசரூபம், பாசசொரூபம், பாசதெரிசனம், பாசசுத்தி என்பன.

பாச சுபாவம் : பாசம் என்பது நிறைவான அறிவற்ற தாம்.

பாச வியாத்தி : அ. ஆணவம், ஆ. மாயை, இ. கன்மம், ஈ. மாமாயை, உ. திரோதம் என ஐவகைப்படும்.

பாசவியாபகம்

அ. ஆணவம் : இது அனைத்துயிர்களிடத்தும் கலந்திருந்தும், அவை தன்னைக்காணாதவாறு இருப்பது. ஒருபொருளாய் இருப்பது.

ஆ. மாயை : காட்சிப் பொருளாய் அன்றிக் கருத்துப் பொருளாய் நிற்பது. இறைவன் ஆணைவழி உலகு, உடல் கருவியாகவும் நிற்பது. இவ்வாறு வடிவு பெற்றிருக்குங்கால் மாயேயம் எனப்படும்.

இ. கன்மம் : உயிர், அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளுள், பிறந்த உடம்புகளால் முகந்து நின்றன போகப் பின்னும் துய்க்கக் கடவனவாய் எஞ்சிநிற்கும் வினைப்பகுதி 'சஞ்சிதம்', எனப்படும். இதனைப் பழவினை என்பர். இதன்வழி உயிர் துய்த்தற்குரியன நல்வினையும், தீவினையும் ஆம். பிறந்த உடம்பால் முகந்து நின்ற வினை 'பிராரத்தம்' எனப்படும். இதனை 'ஏன்றவினை' அல்லது 'நுகர் வினை' என்பர். இதன் வழியும் உயிர் நலந்தீங்குகளைத் துய்க்கும்.

ஈ. மாமாயை : இது வினைமாசுகலவாது நிற்பது. உயிர்களின் வினை நீக்கத்திற்காக இறைவன் நினைவு மாத்திரையில் கொள்ளும் திருவடிவுகள் இருத்தற்கு இடனாயிருப்பது. இறைவன் அருள்வழி நுவலப் பெற்ற நூல்கள் நிலவுதற்கு இடனாயும் நிற்பது.

உ. திரோதம் : உயிர் தன் வினைமாசு நீங்க இன்ப துன்பங்களைத் துய்த்துத் தொலைத்தல் வேண்டும். அதற்கேற்ப உயிரை மறைப்பித்து நிற்பது.

பாசத்தின் குணம் : அது அறிவற்றதாயிருப்பது.

பாச விசேடம்: அவ்வாறு அறிவற்றதாயினும் உயிர்தத்தம் வினைகளைச் செய்ய ஏதுவாய் இருப்பது.

பாச ரூபகம் : இதன் தன்மை யாண்டும் பரந்து நிற்பது.

பாச ரூபம் : உயிர் உடலெடுக்கவும் அதன்வழி மயங்கி நிற்கவும் நிலைக்களனாக இருப்பது.

பாச சொரூபம் : 'செம்பில் களிம்புபோல' உயிரை அடுத்துநின்று அதனை மறைப்பிக்கும். நஞ்சுண்ட உயிர் மயங்குதல் போலமயக்குவிக்கும். குற்றம்செய்தவனை ஒறுத்தல்போலவினையை நுகருமாறுஅதற்கு ஊட்டி வருத்தம்செய்யும், தேரைச்செலுத்தும்

பாகன்போல வினைவழித்துய்க்க உயிரைச் செலுத்தி நிற்கும். உலகெங்கணும் பரந்து நின்று உயிரைத் தகைத்து நிற்கும். அவ்வாறு தகைப்பதால் உயிர் பேரிருளில் கிடக்குமாறு செய்யும்.

பாச தெரிசனம் : பொய்யைப் பொய்யென்று கருதாவாறு செய்தும் தானேபிரமம் எனக் கூறச்செய்தும் விருப்பு, வெறுப்புகட்கு இடனாய் நிற்பது இது என அறிவது.

பாச சுத்தி : பல்லாற்றானும் உயிரும், தளையும் ஒன்றற்கொன்று மறுதலையாய் நிற்கும் என உணர்ந்து அவற்றைத் தன்னின் வேறாகக் கருதுவது. [அம்மறுதலையாவன: உயிர் அறிவுடையது, அருவாயது, நிலையாயது. உடல், உலகு முதலியனவோ அறிவற்றன. உருவுடையன, அழிவுடையன.]

## ஆன்ம தசகாரியம்

இதுகாறும் உயிர் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களை உணருமாறும் அவற்றை விடுக்குமாறும் கூறப்பட்டன. இனி அவ்வுயிர் தன்னை உணருமாறும் தனக்குரிய தலைவனைப் பற்றுமாறும் கூறப்படுதலின் மேலையதனோடு இயைபுடையதாயிற்று. இவ்வாறு உணர்தற்கும் பற்றற்கும் உரிய செயல்கள் பதினொன்றாம். அவை ஆன்ம சுபாவம், ஆன்ம வியாத்தி, ஆன்ம வியாபகம், ஆன்மாவின் குணம், ஆன்ம விசேடம், ஆன்ம ரூபகம், ஆன்ம ரூபம், ஆன்ம சொரூபம், ஆன்மதெரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் என்பன.

ஆன்ம சுபாவம் : உயிர் தத்துவக்கூட்டினைத் தான் எனக் கருதி அதனுடன் கூடியிருப்பது

ஆன்ம வியாத்தி : தத்துவக் கூட்டில் பற்று உள்ளளவும் அப்பொருளில் அடங்கி இருப்பது.

ஆன்ம வியாபகம் : தன்னொடு பொருந்தி இருக்கும் தத்துவக் கூட்டைத் தானாகக் கருதி அதனிடத்து யாண்டும் பரவியிருப்பது.

ஆன்மாவின்குணம் : உணர்த்த உணர்வதும் உணர்ந்ததை மறப்பதுமாய மடமையுடையது.

ஆன்ம விசேடம் : இருவினை ஒப்பும், மலப் பக்குவமும் ஏற்பட்ட காலத்து இறைவன் குருவாய் வந்து உணர்த்த அவ்வறிவு வடிவாய் நிற்பது.

ஆன்ம ரூபகம் : உடம்பு அழியினும், அதனின் வேறும் உயிர் உண்டெனு அறிவது.

ஆன்ம ரூபம் : அறிவு, இச்சை, செயல்களை உடையதாய் அவற்றின் வழித்துன்புற்றிருப்பது. இச்சையாவது, உலகியற் பொருள்களில் பற்றுக்கொண்டிருப்பது. அறிவாவது, அப்பொருள் களைப் பகுத்தறிவது. செயலாவது, அவ்வுலகியற் பொருள்களைத் தனதாக்கிக் கொள்ள முற்படுவது.

ஆன்ம சொரூபம் : உலகு, உடல் முதயலின வான வில்லெனத் தோன்றி அழியுந்தகையன என உணர்த்த அவ்வுணர் வின் வழி நிற்பது.

ஆன்ம தெரிசனம் : உயிர், அறிவு வடிவினதாய் நிற்பது.

ஆன்ம சுத்தி : உலகியல் வழிநின்ற அறிவு, இச்சை, செயல்கள் கெட நிற்பது.

ஆன்ம லாபம் : இந்நிலையில் இறைவன் வழங்கும் பேரானந்தப் பெருவாழ்வில் திளைக்க நிற்பது.

## சிவ தசகாரியம்

உயிர், தான் அல்லாத அத்தனையும் தானென்று உழலாமலும், தான் எல்லாமாய் அதனுள் தாக்காமலும், தான் எல்லாம் ஆனேம் எனும் போதம் தாக்காமலும் உயர்ந்து நின்ற நிலையில் சிவத்தைக் காண்டலும் அதன்வழி அப்பரம்பொருள் வழங்கி அருளும் பேரானந்தத்தைத் துய்க்கவும் நேரும். அவ்வகையில் உயிர் படிப்படியாக உயரத்சகும் படிநிலைகளைக் கூறுவது இப் பகுதியாகும். அவை சிவ சுபாவம், சிவ வியாத்தி, சிவ வியாபகம் சிவத்தின் குணம், சிவ விசேடம், சிவ ரூபகம், சிவ ரூபம், சிவ சொரூபம், சிவ தெரிசனம், சிவ யோகம், சிவ போகம் எனப் பதினொன்றும்.

சிவ சுபாவம் : இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்பது.

சிவ வியாத்தி : யாண்டும் நீக்கமற நிறைந்தும் அனைத் துயிர்களிலும் உயிர்க்குயிராய் விளங்கியும் நிற்பது.

சிவ வியாபகம் : அவ்வாறு நிற்பினும், உயிரது கருமேனி கழிக்கத் திருமேனி கொண்டு நிற்பது.

சிவத்தின்குணம் : என்றும் குன்று அறிவாகி நிற்பதும் முற்றும் உணர்தல் என்பதும் அது.

சிவ விசேடம் : உயிர்க்குயிராய் நிற்பதோடு அது கட்டி னின்றும் நீங்குமாறு தொழிற்படத் தூண்டுவது.

சிவ ரூபகம் : யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடைய தாக இருப்பினும் உயிரது வினைமாசு கழிய உயிர்க்குயிராய் அதனோடு ஒன்றி நிற்பது.

சிவ ரூபம் : அறிவு, இச்சை செயல் ஆகிய முத்தொழிற் பட நிற்பது. இம்முத்தொழில்கள் உயிர்க்கும் உளவேனும் உயிரின் நிலைவேறு, இறைவனின் நிலை வேறும். உயிர்கொள்ளும் இம்முச் செயல்களும் தன்பொருட்டாக நிகழ்வனவாம். இறைவன் கொள்ளும் இச்சையாவது, உயிர்களை ஈடேற்று தற்குத் திருவுளம் பற்றுகையாம். அறிவாவது, உயிர்கள் ஒரு கால எல்லையில் உணர்த்த உணருமாறு செய்வதாம். செயலாவது, உயிர் செய்த வினைக்கேற்ப உடல் கருவி, உலகு, நுகர்வு ஆகியவற்றைக் கொடுத்து அவற்றின் வழி,அவை மலநீக்கம் பெறச் செய்வதாம்.

சிவ சொரூபம் : இறைவன் எல்லாமாய், அல்லவுமாய் நிற்பதாம்.

சிவ தெரிசனம் : உயிர் தன்னை இழந்த நிலையில், இறைவனைக் காண்பதாம்.

சிவ யோகம் : அவ்வாறு கண்டபரம் பொருளொடு ஒன்றுபட நிற்பதாம்,

சிவ போகம் : உயிர்தன்னையும், இறைவனையும் அறிந்து அவ்இறைவனுடன் ஒன்றிய நிலையில் அவன் வழங்கும் பேரானந்தத்தைப் பெற்று நிற்பதாம்.

## ஒப்பீடு

### 1. சிவஞானபோதமும் தசகாரியமும் :

இப்பத்துவகைச் செயல்களும் சிவஞானபோதத்தில் கூறப் பெற்றுள்ளன. 'ஏழாம் சூத்திரத்தில் தத்துவரூபம், தத்துவ

தெரிசனம், ஆன்மரூபம் ஆகிய மூன்றும்; எட்டாம் சூத்திரத்தில் தத்துவசுத்தி, ஆன்ம தெரிசனம், சிவரூபம் ஆகிய மூன்றும், ஒன்பதாஞ்சூத்திரத்தில் ஆன்மசுத்தி,சிவதரிசனம்ஆகியவிரண்டும், பத்தாஞ்சூத்திரத்தில் சிவயோகமொன்றும், பதினொன்றுஞ் சூத்திரத்தில் சிவபோகமொன்றும் அடங்கியிருக்கின்றன எனவரும் கூற்றான் இவ்வுண்மை அறியப்பெறும்.

— தசகாரிய விளக்கம் பக்கம். 88 - 89

2. தசகாரியத்தை விளக்குதலில் ஞான நூல்கள் பதினான்கனுள் உண்மை நெறிவிளக்கம் முதலிடம் பெறுகின்றது. ஆதலின், அந்நூலொடு இதனை ஒப்பிட்டுக் காணலாம்.

| உண்மைநெறிவிளக்கம் | திரிபதார்த்தரூபாதி தசகாரியஅகவல் |
|---|---|
| தத்துவரூபம்: முப்பத்தாறு தத்துவங்களின் வடிவைக் காண்பது. | இதனைப் பாச சுபாவம் முதலாகப்பாசசொரூபம் ஈறாக எண்வகையாக விரித்துக்கூறும். |
| தத்துவதெரிசனம் : தத்துவங்கள் நிலையற்றனவாய், அறிவற்றனவாய் அழிவனவாய் இருக்கும் என அறிதலாகும். | இவ்விரண்டையும், இவ்வகையிலேயே வைத்து விளக்கும். |
| தத்துவ சுத்தி : இக்கட்டினின்றும் தன்னை விலக்கிக் காண்டலாகும். | |
| ஆன்மரூபம்: தத்துவக்கட்டினின்றும் நீங்கித் தன்னிலையை அறிதல் வேண்டும் எனத் திருவருள் வழங்கிய ஞானத்தைத்தானாகக் காண்பதாம். | இதனை ஆன்ம சுபாவம் முதலாகஆன்மசொரூபம் ஈறாக எண்வகையாக வைத்து விளக்கும். |
| ஆன்மதெரிசனம்: உயிர் தன் செயல் என ஒன்று இன்றி அனைத்தும் இறை செயலே என உணர்வது. | இவ்விரண்டனொடு உயிர் பெறும் பயனாய ஆன்ம லாபம் என்பதையும் கூட்டிஉரைக்குப் இந்நூல் |
| ஆன்ம சுத்தி : உயிர் தன் தன்மை கெட்டு இறையருளில் ஒன்றித் தான் என்பதை உணராது நிற்பதாம். | |
| சிவரூபம் : உயிர்களை மலப்பிணிப்பினின்றும் நீக்கி உயர் சிவத்தொடு சேர்க்கும் திருவருளாகிய ஞானமே சிவவடிவாகும். | இதனைச் சிவசுபாவம் முதலாகச் சிவசொரூபம் ஈறாக எண்வகையில் வைத்துஇந்நூல்விளக்கும் |

சிவதெரிசனம் : யான் எனது என்ற அற்றஇடமே திருவடியாம். பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிற்பது முக மாம், இவ்வடிவை உணர்ந்த நிலையில் தோன்றும் ஆனந்தமே முடியாம். இத் தகைய உயர்நிலைஉற்ற உயிர்மீண்டும் பாசத்துள் அழுந்தாமலும்,தன்முனைப் பைப் பெறுமலும், தன்னை இவ்வாறு வளர்ந்தெடுத்தஅருட்சத்தியில்நின்று அழுந்தி விடாமலும், இன்பவடிவின ஞய் இருக்கும் இறைவனைச் சேர்ந்து நிற்பது சிவதெரிசனமாகும்.

இம்மூன்றையும் இவ் வகையிலேயே வைத்து விளக்கும் இந்நூல்.

சிவயோகம் : எப்பொருளைக் காண்கி னும், அவற்றின் மெய்ப் பொருள் சிவமே எனக்கண்டு, அதனெடு ஒன்றுபடுதலாகும்.

சிவபோகம் : உயிர்தன் செயலற்றுத் தான் அற்று நிற்க இறையருள் அதனைத் தானுக்கி விடும். அதுவே சிவபோகமாகும்.

சிவபோகசாரமும் தசகாரியமும் :

திரிபதார்த்தரூபாதி தசகாரியம் எனும் நூலை அருளிய குருமூர்த்திகளே சிவபோக சாரத்தையும் அருளியவராவர். உயிர் ஈடேறுதற்கான இச்செயல்கள் பத்தையும் திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவலில் விரிவாகக் கூறியவர், சிவபோக சாரத்தில் மிகச் சுருக்கமாகவும் தொகுத்தும் கூறியுள்ளார். அவ்வாறுய இடங்களுள் குறிப்பிடத் தக்கன இரண்டாம்.

1. தானல்லா தத்தனையுந் தானென் றுழலாமல்
தானெல்லா மாயதனுள் தாக்காமல் — தானெல்லாம்
ஆனேம் எனும்போதந் தாக்காமல் ஈசனிடத்து
ஆனேனே ஆயினவ ஞம். (59)

தான் எல்லாமாய் அதனுள் தாக்காமல் என்பது தத்துவ சுத்தி யாகும். தான் அல்லாத அத்தனையும் தான் என்று உழலாது இருப்பது ஆன்ம தெரிசனமாகும். தான் எல்லாம் ஆனேம் எனும் போதம் தாக்காமல் இருப்பது ஆன்ம சுத்தியாகும். ஈசனிடத்து ஆனவனுக இருப்பது சிவயோகமாகும். ஆயினவனும் என்பது சிவபோகமாகும்.

2. தத்துவத்தை விட்டருளிற் றன்கலந்து தன்னிழப்பின்
மெத்துஞ் சுகத்தின் மிகஅழுந்திச் — சுத்தமாய்
ஒன்றாகி நின்ற உணர்வும் ஒழிந்தக்கால்
அன்றே சிவபோக மாம். (65)

தத்துவத்தைவிட்டு என்பது தத்துவ சுத்தியாகும். தான் கலத்தல் என்பது ஆன்ம சுத்தியாகும். தன்னை இழந்து மெத்தும் சுகத்தில் மிக அழுந்துவது என்பது சிவயோகமாகும். சுத்தமாய் ஒன்றாகிநின்ற உணர்வும் ஒழிந்திருப்பது என்பது சிவபோகமாகும்.

திருக்குறளும் தசகாரியமும் :

இவற்றிற்கெல்லாம் முன்னையதும் தொன்மையதும் ஆகிய திருக்குறளிலும் இப்பத்துவகைச் செயல்களும் குறிப்பாகக் கூறப்பெற்றுள்ளன.

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (331)

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானா மாணாப் பிறப்பு. (351)

இவை இரண்டும் தத்துவ தரிசனமாகும்.

சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். (359)

இங்குக் குறிக்கப் பெற்ற சார்புகெட ஒழுகுதல் என்பது தத்துவ சுத்தியாகும்.

யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

இது ஆன்ம சுத்தியாகும்.

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு. (358)

இது சிவயோகமாகும்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாராநெறி. (356)

இது சிவபோகமாகும்.

இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. (352)

இது பாசநீக்கமும், சிவப்பேறும் பெறுதலாகிய ஆன்மலாபமாகும்.



பண்டார சாத்திரங்கள் :

# சொக்கநாதக்கலித்துறை, பண்டாரக்கலித்துறை, நவரத்தினமாலை

டாக்டர் திரு. மு. சிவச்சந்திரன்

தருமை ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய நூல்கள் எட்டு. அவற்றில் சொக்கநாதக்கலித்துறை, பண்டாரக் கலித்துறை, நவரத்தினமாலை என்னும் நூல்களும் அடங்கும். ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய நூல்களுள் முதலாவது நூலாகக் கருதப்பெறுவது சொக்கநாதக்கலித்துறை என்பது ஆகும். 'பண்டாரக்கலித்துறை' என்பது 'ஞானப்பிரகாசமாலை' என்றும் வழங்கப் பெறுவதுண்டு. சொக்கநாதக்கலித்துறை என்பது சிவ தோத்திர நூல். பண்டாரக்கலித்துறை குருதோத்திரநூல். நவரத்தினமாலை என்பது குருமூர்த்திகள் பரிபூர்ணம் எய்திய பொழுது வருந்திப்பாடிய நூல். இனி இவைகுறித்துத் தனித்தனியே ஈண்டுச் சிந்திக்கலாம்.

## சொக்கநாதக் கலித்துறை :

இந்நூல் 11 பாடல்களால் ஆனது. சொக்கநாதப்பெருமான் மீது பாடப்பெற்றது ஆதலின் சொக்கநாதக் கலித்துறை என்னும் பெயர் பெற்றது. இதுதான் முதன் முதல் பாடியநூல் என்பதற்குச் சான்றாக ஒரு பாடல் இதில் அமைந்துள்ளது.

ஸ்ரீ குருஞானசம்பந்தர்தம் அருள் வரலாற்றில் குறிப்பிடத் தக்கது, மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் சொக்கநாதப் பெருமான் பெட்டகக் கோயிலுடன் கைவரப் பெற்றது ஆகும். இதனைக் குறிப்பிட்டு இந்நூலில் ஆசிரியர் பாடியருளுகின்றார்.

" கண்ணுக்கு இனிய பொருளாகி யேஎன் கரத்தில் வந்தாய்
விண்ணும் பரவிடும் அற்புதமே! என்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வசரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே "

என்பது அப்பாடல். பெருமான் கண்ணுக்கு இனிய பொருளாகித் தம் கைவரப் பெற்றமையை இப்பாடலில் ஆசிரியர் வியந்து பாடியுள்ளது இந்நிகழ்ச்சிக்கு அகச்சான்ருக உள்ளது. இதன் பிறகே பெருமானின் திருவருளால் குருமுதல்வருக்கு ஒரு குருநாதர் காட்டப் பெறுகிருர். எனவே இப்பாடல் அமைந்த இந்நூலே ஆசிரியர் பாடிய நூல்களுள் முதலாவதாகக்கொள்ள இயலும்.

இந்நூலுள், 'சொக்க நாயகனே' என்று ஒன்பது பாடல்களிலும், 'மதுராபுரிப் பிஞ்ஞகனே' என்று இரண்டு பாடல்களிலும் ஆசிரியர் மகுடமாக அமைத்துப் பாடியுள்ளார்.

இந்நூல், ஸ்ரீ குருஞானசம்பந்தர் தம் பெற்றேர்களை விட்டுப் பிரிந்து மதுரையில் வாழ்ந்திருந்த காலத்தில் பாடியது. இளம் பிராயத்தே தம் பெற்றேர்களை நோக்கி, "நீங்கள் என் ஊனுக்குத் தானே தாய் தந்தையர்; என் உயிருக்குத் தாய் தந்தை இதோ இத்திருக்கோயிலில் இருக்கின்ருர்" என்று அழுத்தமாக எடுத்துரைத்த பெருமான் இவர் ஆதலின் அதன் போக்கு இந்நூலில் தெளிவாகத் தெரிகிறது.

"ஆதாரம் இந்நிலத் துன்னையல்லால் எனக் காருளரோ
மீதான மான வெளியினைக் காட்ட விரைந்துடன் வந்(து)
ஓதாமல் ஓதி எனை வசமாக்கினை உள்ளொளியாம்
நாதா அருள்செய் மதுரா புரிச் சொக்க நாயகனே.

என்னும் பாடலில் "ஆதாரம் இந்நிலத்து உன்னை அல்லாமல் ஆருளரோ" என்று ஆசிரியர் கூறும் பாங்கு அவரின் உள்ளத் தெளிவிற்கு எடுத்துக்காட்டு.

இனி வருகிற ஒன்பதுபாடல்களிலும் திருமுறை ஆசிரியர்களின் வாக்கும் போக்கும் படிந்துள்ளமையை அறிய முடிகின்றது. எளிய சொற்களும் இனிய நடையும் குருநாதரின் பாடல்களுக்குச் சொந்தமானவை; நேர் நின்று பேசுவது போன்ற எண்ணத்தை உருவாக்கும் ஆற்றலுடையவை. தம்மின்குறைகளை அடுக்கிக்கூறிக் கொள்வதாக ஒருபாடல்.

"கல்லது நெஞ்சம்; இரும்பே இருசெவி; கண்கள் மரம்;
சொல்லுவதும் பொய்; அவமே தொழில்; துக்க சாகரமாம்
அல்லல் என் பங்கு; நின் அன்பர்பங்கு ஆனந்தமாக வைத்தாய்;
நல்லது! நல்ல மதுரா புரிச் சொக்க நாயகனே"

என்னும் இப்பாடலில், "அல்லல் என்பங்கு; அன்பர் பங்கு ஆனந்தமாக வைத்தாய் - நல்லது நல்ல மதுராபுரிச் சொக்க நாயகனே" என்னும் தொடரில் 'நல்லது' என்னும்சொல் நயமுடன் ஆளப்பட்டிருத்தலை அறியலாம்.

ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் தன்னை எங்ஙனமெல்லாம் ஆட்கொள்ள வேண்டும் என்னும் வேண்டுதலை ஒரு பாடலில் அழகுற ஆசிரியர் தெரிவிக்கின்றார். "பாடும்படியும் உன்னை நினைந்து ஏத்திப் பணிந்து எழுந்து ஆடும்படியும் ஐந்துமலங்களும் எனது உளத்திருந்து விலகி ஆற்றல் அடங்கும்படியும் நினது ஆனந்த சாகரமே மேல் என்று நான் நாளும் நாடும்படியும் செய்து அருள்! மதுராபுரிச் சொக்க நாயகனே" என்று வேண்டுகின்றார்.

" பாடும்படிசெய்; நினை நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே
ஆடும்படி செய்; மலம் ஐந்துமே அடியேன் உளத்தே
விடும்படி செய்; நின் ஆனந்த சாகரம் மேல் எனவே
நாடும்படி செய்; மதுராபுரிச் சொக்க நாயகனே "

என்பது அப்பாடல்.

சித்தாந்தச் செம்பொருள் ஆங்காங்கே தெளிவாக மிளிர்வதனையும் இந்நூலுள் காணலாம். ஆண்டவன் அருளின்றி யாதொன்றையும் உயிர் தன்னளவில் செய்ய ஒண்ணாது என்றும் அவரேவந்து ஆட்கொள்ளுவதையே உயிர் வேண்டத்தக்கது என்றும் சித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

" தாமே தரும்அவரைத் தம் வலியினால் கருதல்
ஆமே இவனூர் அதற்கு "

என்று திருவருட்பயன் இதனைக் கூறும். இக்கருத்தமைய, குருநாதர் சொக்கநாதப்பெருமானிடம் வேண்டுவதைப் பாருங்கள்.

" பொய்யாம் மலமறுத்(து) என்னுளத் தானந்த பூரணத்தை
மெய்யா அளித்து விடாதிகண்டாய்; விடிலோ கெடுவேன்;
ஐயா! எனதுயிரே வினைமார்க்கத் தழுந்தி என்றும்
நையா(து) அருள்செய்; மதுரா புரிச் சொக்க நாயகனே "

மேலும் ஒருபாடலில் ஆண்டவன் இதுவரைதன்னை ஆட்கொண்ட முறையினையும் இனி எங்ஙனம் ஆட்கொள்ள வேண்டும் என்னும் கருத்தினையும் ஆசிரியர் அழகுறக் கூறுகின்றார்.

"அறிவைத் திருப்பி நின்பாதார விந்தம் அடையவல்ல
நெறியைக் கொடுத்து நிறுத்தினையே; நின் மலா இனி என்
பொறியைத் தவிர்த்து நின் ஆனந்த சாகர பூரணத்தைப்
பிறிவற்றிருக்க வைப்பாய் எனை ஆண்டருள் பிஞ்ஞகனே"

என்னும் பாடல் நாம் ஒவ்வொருவரும் உணர்ந்து ஓதவேண்டிய பாடலாகும். அறிவைத்திருப்பி ஆண்டவனின் பாதார விந்தத்தை அடையவைக்கும் இந்நூல் அனைவரும் ஓதி உய்யும் சிறப்புடையது.

**பண்டாரக் கலித்துறை :**

ஆண்டவன் திருக்குறிப்பால், குருஞானசம்பந்தர், தேடிக் கண்டு கொண்ட குருமூர்த்திகள் கமலை ஞானப்பிரகாசர். இப் பெருமான் மீது பாடப்பெற்ற அரிய நூலே ஞானப்பிரகாசமாலை என்னும் இந்நூலாகும். 'பண்டாரம்' என்னும் சொல்வழக்கு முன் காலத்தில் பொருள்வைப்பையும் அருள்வைப்பையும் குறிக்கும் உயரிய சொல்லாக விளங்கி வந்தது. இறைவனின் அருட் செல்வத்தைக் குறிக்கவந்த மாணிக்கவாசகர், "மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே" என்று மூலபண்டாரம் என்னும் சொல்லால் அருள்வைப்பைக் குறித்தார். ஆனால் இச் சொல் வழக்காற்றில் இதுபொழுது பொருள் திரிந்துபோயிற்று.

கல்வி கேள்விகளில் சிறந்த ஞானாசிரியர்களைக் குறித்துவந்த 'பண்டாரம்' என்னும் சொல்லை, ஸ்ரீ குருஞானசம்பந்தர் தம் ஆசிரியர் மீதுபாடப்பெற்ற இந்நூலுக்குப் பெயராக்கிப் 'பண்டாரக் கலித்துறை' என்று வழங்கினார். இந்நூல் 36 கட்டளைக்கலித்துறைகளால் ஆனது. 36 தத்துவங்களை உபதேசித்த தம் ஞானாசிரியருக்கு புகழ்மாலை சூட்ட வந்த ஆசிரியர் 36 பாடல்களில் செய்திருப்பது எண்ணி மகிழத்தக்கது.

குருபக்தி எங்ஙனம் இருக்கவேண்டும் என்பதற்குக் குருஞான சம்பந்தர் தாம் வாழ்ந்ததோடன்றி இந்நூலுள் ஓதியும் காட்டியுள்ளார். தம் ஞானாசிரியரை, 'ஞானப்பிரகாசன்' 'ஞானப்பிரகாச தேசன்' 'ஞானப்பிரகாசசிவன்' 'ஞானப்பிரகாச ஆண்டவன்' 'ஞானப் பிரகாச மகிபன்' 'ஞானப்பிரகாச பரமன்' 'ஞானப்பிரகாச தேசிகன்' 'ஞானப்பிரகாச எழிற்தரு' என்றெல்லாம் எடுத்துப் போற்றியிருப்பதே அதற்குச் சான்று பகர்வனவாம். 'குருவே சிவன் எனக் கூறினன் நந்தி' என்னும் திருமூலரின் வாக்கிற்கிணங்க இத்தொடர்களில், 'ஞானப்பிரகாசன்' என்னும் பெயரோடு சிவன், பரமன், ஆண்டவன் என்னும் திருப்பெயர்களையும் சேர்த்து விளித்திருப்பது எண்ணத்தக்கது.

குருஞானசம்பந்தர் தம் ஞானாசிரியரே தமக்கு அனைத்தும் என்று கூறவந்தவர், மிக உயர்ந்த நிலையில், மாதா, பிதா, குரு, தெய்வம் என்னும் நான்கு உறவுகளும் எனக்கு நின்றன் பாதாரவிந்தமே என்று கூறியுள்ளார். ஏனெனில் இவரின் வரலாற்றில் மாதா, பிதா, என்னும் இரண்டு உறவும் சொக்கநாதப்பெருமான் சந்நிதியில் மாறி இறைவனே என்றாயிற்று என்பதும் பிறகு அப்பெருமான் காட்டியருள இந்த குருநாதரை அடைந்துய்ந்துள்ளார் என்பதும் ஆதலின் நிறைவான நிலையில் இக்குருநாதரே இவருக்கு மாதா, பிதா, குரு, தெய்வம், என்றாயிற்று என்பதிலும் ஓர் உண்மை இருக்கவே செய்கிறது. இதில் இன்னுமொரு குறிப்பு, பொதுவாக எல்லோர் வாழ்விலும் மாதா, பிதாவைக் காட்ட, பிதா குருவைக் காட்ட, குரு தெய்வத்தைக்காட்ட, இவரின் வாழ்க்கையில், சிறப்பாக, மாதாவும் பிதாவும் தெய்வத்தைக்காட்ட தெய்வமே குருவைக் காட்ட நிகழ்ந்துள்ள நிகழ்ச்சி தனித்த நிலையுடையது என்பது எண்ண வேண்டிய ஒன்று.

" மாதா, பிதா, குரு தெய்வம் துணை என்பர் மக்கட் குன்றன்
பாதார விந்தம் அடியேற்கு அந்நான்கெனப் பற்றிடென்றே
போதார் கமலையுள் ஞானப்ரகாச புகன்றும் என்பால்
நீதான் பராமுக மானால் உரைப்பதென் நின்மலனே "

என்பது அப்பாடல். இவரின் தெளிந்த குருபக்தி, மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது அனைத்தும் நீரே என்று கூறாமல் நின்றன் திருவடி மலர்களே என்று கூறியுள்ள கூற்றில் வெளிப்படுகிறது.

குருநாதரை இறைவன் என்றே கருதி வழிபட வேண்டும் என்று பலநூல்கள் வற்புறுத்திக் கூறியுள்ளன. அங்ஙனமே நினைந்து வழிபட்டு உய்ந்த அடியார்களும் பலர் வரலாற்றில் காணப்பெறுகின்றனர். தருஞானசம்பந்தர் எம் குருநாதராகிய ஞானப்பிரகாசரைச் சிவன் எனக் கருதாதவர் நரகத்தில் சென்று வாழ்வர் என்று எச்சரிக்கிறார்.

" ஒருத்தனை எண்ணில் உயிர்க் குயிரானை உணர்வுக் கெட்டாக்
கருத்தனை ஞானப் பிரகாசனைக் கமலாலயனை
நிருத்தனை அன்பர் நினைத்ததெல்லாம் தரும் நித்தனைச்சற்
குருத்தனை யீசனென் றெண்ணார் நரகிற் குடிமக்களே "

என்பது அப்பொருளமைந்த இனிய பாடல்.

குருபக்தியிலும் சிவபக்தியிலும் அடிப்படையான தேவை ஒன்றியிருத்தலும் பிறரின் விமர்சனங்களைக் கண்டு நெஞ்சு

தடுமாருமையுமே என்பது நிச்சயம். ஏனெனில் இந்த உலகம் நல்லது செய்வோரை நலியவைத்துப் பேசும்; அது இன்று நேற்றல்ல; என்றும் இவ்வுலக இயற்கை. அதுகண்டு துவண்டு போதலோ அல்லது தன்னுடைய வாழ்க்கையை மாற்றிஅமைத்துக் கொள்ளுதலோ கூடவே கூடாது என்பர் ஞானசிரியர்கள். இக் கருத்துக்களைக் குருமுதல்வரும் ஒரு பாடலில் வெளியிடுகின்றார். அவர் தம் வாழ்க்கையிலும் இடையூறு - ஏளனப் பேச்சு — பகை யுணர்வு ஏற்பட்ட நிலையில் நெஞ்சில் உறுதிப்பாடு கொண்டு வாழ்ந்தமையை இப்பாடல் மூலம் வெளியிடுகின்றார்.

" ஆரார் பகைக்கினும் ஆரார் நகைக்கினும் ஆவதென்ன
சீரார் கமலையுள் ஞானப்ர காசன் என் சிந்தையுள்ளே
பேராதிருந்து சிவானுபவம் தரப் பெற்றதினால்
வாராது சென்மமும் போகாது பேரின்ப வாரியுமே "

என்பது அவ் அனுபவப்பாடல்.

நல்லது இது என்று எப்பொழுது மனத்தில் தோன்றி விட்டதோ அதன்பிறகு உலகு கூறுவதை நோக்கி மாற்றிக் கொள்வது எள்ளளவும் நியாயமும் இல்லை; வளர்ச்சிக்கும் உதவாது. இதனை நெஞ்சில் கொண்டு வாழ்தல் வேண்டும். அதனால் தான் அருணகிரிநாதர் தம் கந்தர் அலங்காரத்தில்,

" பொய்யை நிந்திக்கிலேன்; உண்மை சாதிக்கிலேன் "

என்று கூறுகிறார். எனவே சைவ அன்பர்கள் பொய்யை நிந்திப்ப தோடு நின்று விடாது உண்மையைச் சாதிக்கவும் முற்படவேண்டும்.

எங்கும் என்றும் எப்பொழுதும் குருநாதரின் திருப்பெயரே தன்னை உய்விக்கும் என்னும் ஆழமான பக்தி, ஆசிரியர் குருஞான சம்பந்தரின் திருவுள்ளத்தில் இருந்தது என்பதற்கு ஒருபாடல் இந்நூலில் காணப்படுகிறது. அடிக்கடி நினைவுகூர வேண்டிய பாடல் இது.

" கிடந்தாலும் ஞானப்ர காசன் என்பேன் கிடந்தே எழுந்து
படர்ந்தாலும் ஞானப்ரகாசன் என்பேன் பசியோடு பிணி
அடர்ந்தாலும் ஞானப்ரகாசன் என்பேன் அந்த அந்தகனார்
தொடர்ந்தாலும் ஞானப்ரகாசன் என்பேன் பிழைச்சொல்
இல்லையே "

என்பதுவே அப்பாடல்.

தம்குருநாதன் திருமடத்தில் வாழும் மனிதர்களேயன்றி பிற உயிர்களும் கூடச் சித்தாந்தக் கருத்துக்களைக் கூறும் என்னும் ஆசிரியரின் கூற்று எண்ணி எண்ணிப் போற்றத்தக்கது. கவுளி கூட முப்பொருள்களின் உண்மையினைப் பேசும் என்கிறார்.

" .............. ஞானப்ரகாசன் பயின்மடத்தில்
கெவுளி உரைக்கும் பதிபசு பாசத்தின் கேள்விகளே "

சித்தாந்தச் செந்நெறியைப் பரப்பவேண்டியதருணம் இவர்கள் வாழ்ந்த காலம் ஆதலின் அதற்கேற்ப எந்தச் சுயலாபமும் கருதாமல் பணிபுரிந்துள்ளனர் நம் ஞானாசிரியர்கள். அதனால் குருஞானசம்பந்தர் ஒருபாடலில் ஞானப்ரகாசன் சீடர்களாக வாழ்வோர் எவரும் கருவாசலிலும், புலக் கள்வர்களின் வாசலிலும், பேதையர் வாசலிலும் செல்ல மாட்டார்கள் என்று கூறுகின்றார்.

" கருவாசலில் புலக்கள்வர் தம் வாசலில் கட்டரையன்
பெருவாசலில் மற்றைப் பேதையர் வாசலும் பின்செல்வரோ
மருவாசம் வீசும் மதுரேசன் சம்பந்தன் வாழ்மடத்தின்
திருவாசலில் செல்லும் செல்வர்தம் வாசலில் செல்பவரே "

என்பது அப்பாடல்.

கருவாசலில் புகாமல் இருக்கச் சம்பந்தன் திருமடத்தின் திருவாசலில் புக அனைவரும் முற்படுவார்களாக!

## நவரத்தினமாலை :

இந்நூல் ஒன்பது திருப்பாடல்களால் ஆயினமையின் இப்பெயர் பெற்றது. தம் ஞானாசிரியர் பரிபூர்ணம் எய்தியபொழுது வருந்திப் பாடிய நூல் இது என்பதற்கு இதில் பல சான்றுகள் காணக் கிடைக்கின்றன. இந்த உலக வாழ்க்கை பொய்யானது என்று எண்ணி இதனை நீத்து நீ சென்று விட்டாய்; என்னை மட்டும் இப்பவத்தில் உழலவிட்டாயே இது தகுமா? என்று கேட்கிறார்.

" மாயப் பிரபஞ்ச வாழ்க்கை பொய்யென்று மனத்திலுற்றுக்
காயத்தை நீக்கிப் பரிபூரணத்தினைக் கைக் கொடென்னைத்
தேயத்திடைக் கிடந்து துழலச் செய்தனை தீங்கு பெற
ஞாயத்தை எற்கருள் ஞானப்ர காச நவமணியே "

என்பது அப்பாடல்.

தம் குருநாதர் தம்மைக் குருவாரந்தோறும் வருக என்று ஆணையிட்டுத் தருமைக்கு அனுப்பினார் என்றும் ஒவ்வொரு குருவாரமும் வந்து தரிசித்த எனக்கு இன்று அங்ஙனம் வழிபட இயலாது போயிற்றே என்றும், எனக்கு ஆறுதலாகத் திருவாசகம் அருளிய திருவாய் ஒரு வாசகமும் அருளாது இருக்கின்றதே! பெருமானே! என்றும் நெஞ்சுருக வருந்திப் பாடுகிறார்.

" குருவாரம் தோறுமே வந்துனைப் போற்றவும் கூறிய சொற்(கு)
அருளே நிற்காயத்தை நீக்கினை யேல் அடியேன் தனக்கு
ஒருவாசகம் இன்றி என்னைப் பிரிவது உனக்கழகோ
திருவாசகம் உரை ஞானப்ர காச சிகாமணியே "

என்னும் பாடல் இந்நிகழ்ச்சிக்கு நல்ல அகச்சான்றாக விளங்குகிறது.

இந்நூலில் தம் குருநாதரை நவமணி என்றும் அருள்மணி என்றும் சிகாமணி என்றும் மகிழ்மணி என்றும் உயிர்மணி என்றும் நிதிமணி என்றும் ஆசிரியர் எண்ணி நெகிழ்ந்து போற்றுகிறார்.

## நிறைவுரை :

ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய இம்மூன்று நூல்களும் பா அமைப்பிலும் பாட்டின்பொருள் நிலையிலும் தேர்ந்து உள்ளமையை உணரலாம். தாமும் வாழ்ந்து தம்மைச் சார்ந்தோரும் வாழ நெறி காட்டும் உத்தமராய், குருநாதர் விளங்கிய திறன் இந்நூல்களில் காணப்படுகிறது. ஓடிவரும் காரணர்க்கு உண்மை வைத்த பொழுது குருநாதராயும் குருவாரம்தொறும் ஓடிச் சென்று தம் குருநாதரைத் தரிசித்த பொழுது சீடராயும் விளங்கிய வரலாறு, பாடம் புகட்டும் பண்புடை வரலாறாகும்.

எனவே இம்மூன்று நூல்களையும் ஒருங்கே கற்போர், குருவருளை நாடி அதன்வழி திருவருளைப் பெறும் பக்குவத்தைப் பெற்று உய்வார்களாக!



# "வர்ணாச்சரம சந்திரிகா"

திரு. V. கணேசன்

## 1. நூல் பெயர் :

"வர்ணாச்சரம சந்திரிகா" என்று பெயர். இது வடமொழியில் காமிகாதி ஆகமங்களிலும், இன்னும் பற்பல க்ரந்தங்களில் இருந்தும் பல உதாரண விளக்கத்தோடு தொகுத்து எழுதப்பட்ட ஓர் அற்புதமான நூலாகும்.

## 2. பெயருக்கான தமிழ் விளக்கம் :

"வர்ணாச்சரம சந்திரிகா" என்ற இந்நூல் பற்பல நூல்களில் கூறப்பட்ட சைவாகம பிரசித்தமான கர்மங்களிலும் நான்கு வர்ணத்தாருக்கும் நான்கு ஆச்ரமங்களிலும் தகுதிஉண்டுஎன்பதைப் பல சான்றுகளின் மூலம் ஒரு சேர எடுத்துக்காட்டுவதால் "சந்திரிகா" எனப்பெயர் கூறுவர். வர்ணம் என்பதற்கு இருபொருள் உண்டு. ஒன்று அகாரம் (எழுத்து), மற்றொன்று ஜாதி எனப் பொருள்படும். இங்கு வர்ணம் என்றால் ஜாதி. அதாவது நான்கு வர்ணத்தாருக்கும் நான்கு ஆசிரமங்களிலும், ஆகம சம்பந்தமான சகல காரியங்களிலும் அதிகாரம் உண்டு என இந்நூல் கூறுகிறது. பற்பல சாஸ்திரார்த்தத்தை ஒரு சேரத் தொகுத்துக் கூறுவதை "சந்திரிகா" எனக் கூறுவர். சந்திரன் மூலப்பொருள். அதனுடைய ஒளியை, சந்திரிகா என்று கூறுவார்கள். சந்திரன் போன்ற பற்பல நூல்களில் உள்ள வர்ணபேதம், ஆசிரம விஷயங்களின் பேதம், சைவாகமக் கிரியைகளில் அதிகாரம் இவைகளைச் சாராம்சமாக வழங்குவது சந்திரிகா போன்றதாகும். அதனால் தான் சந்திரிகா எனக் கூறப்பட்டுள்ளது.

## 3. நூல் ஆசிரியர், பெயர், பெருமை, காலம் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீ மெய்கண்ட சந்தான ஞானபீடாதிபதியாகிய ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

முதற்கொண்டு ஏழாவது பீடாதிபதியாக விளங்கிய சுத்தாத்வைத சைவசித்தாந்த சார்வபௌமரான ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிகேந்திர சுவாமிகள் அவர்கள் ஓர் சிறந்த தொகுப்புநூலாக இதனைச் செய்துள்ளார்கள். இவர் வடமொழி, தென் மொழிகளில் அதி வல்லுநராய்ச் சிவாகம புராணங்களிலும், தர்க்க வியாகரணங் களிலும் திராவிட வேதமாகிய பன்னிரு திருமுறையிலும், வேதாகம நுண்பொருளை நுவலுஞ் சைவசித்தாந்த சாஸ்திரத்திலும் மிகுந்த வல்லமை பெற்ற ஒப்பற்ற ஞானசார்ய பெருந்தகையாவர்.

திருவையாற்றுப் புராணம், ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிகர் காலத்தில் செய்யப்பட்டதெனத் தெரிவதால், அந்தப் புராணத்தில் காரணமும், காலமும் குறிப்பிடப்பட்டுள்ளது. திருவையாற்றுப் புராணம் இயற்றிய காலம் கி. பி. 1605 ஆதலால் இந்நூல் தோன்றிய காலம் கி. பி. 1600 ஆம் வருடமாயிருக்கலாம். மேலும் திருவையாற்றுப் புராணம் பாடுவதற்குச் சில ஆண்டுகள் முன்னரே செய்யப்பட்டதெனத் தெரிய வருவதால் இன்றைக்குச் சுமார் 388 வருடங்களுக்கு முன்னரே வர்ணாச்சரம சந்திரிகா இயற்றப் பெற்றதாகக் கொள்ளமுடிகிறது. அதாவது பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதி எனக் கொள்ள இயலுகிறது.

## 4. நூல் செய்யவேண்டிய அவசியம் :

இந்த நூல் ஏன் செய்யவேண்டும் என்று நாம் நோக்குங்கால் இதனுடைய அவசியத்தை இந்நூலின் முகவுரையில் மிக மிகத் தெளிவாக – சந்தேகத்தைப் போக்கக் கூடிய அளவில் இந்நூல் ஆசிரியர் கூறியதை நன்கு எடுத்து உரைத்துள்ளார்கள். அதனை இனிச் சுருக்கமாகக் காண்போம்.

ஒரு சமயம் தஞ்சை மாநகரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டையாண்டுவந்த ஓர் அரசன் தனது நான்குவகைச் சேனைகள் புடைசூழக் காவிரிப்பூம்பட்டினம் நோக்கிச் சென்றான். அப்படிச் செல்லும் நேரத்தில் மயிலாடுதுறைக்குச் சமீபமான தருமபுரமாகிய ஞான நகரை அடையும் தருணத்தில் இரவு நேரம் வந்துவிடவே, ஸ்ரீ குருஞானசம்பந்தப்பெருமானுடைய அர்த்தஜாம காலஆராதனை நடக்கக் கண்டு தனது ஊர்தியிலிருந்து கீழே இறங்கி வழிபட்டான். அந்தச் சமயத்தில் அரசர் சமீபத்தில் இருந்த சிலர், "இஃது ஓர் சூத்திரர்சமாதி, அரச குலத்தவராகிய தாங்கள் இதனைத் தரிசித்தல் கூடாது எனவும், இனி ஏனையோரும் இக்குற்றத்திற்கு ஆளாகா வண்ணம் இவ்வாலயத்தையே எடுத்து விடல் வேண்டும் எனவும்

கூற அதற்கு அரசன் தன் பரிஜனங்களை ஏவ, அவர்களும் அவ்வாறே செய்கையில், இடித்தஇடத்தில் இருந்து இரத்தம்வருவதைக்கண்ட ஏனையோரும் மயக்கமுற்று விழுந்தார்கள். கடலாடச் சென்ற அரசனுக்குப் பாதி வழியிலேயே இரண்டு கண்களும் பார்வை அற்றதாகவும், மற்றவர்களுக்கு வாய் பேச முடியாமலும் ஆயிற்று.

இதை உணர்ந்த அரசன் தனது தவற்றை எண்ணி மீண்டும் திருமபுரம் வந்து ஞானசாரிய ஸ்வாமிகளை வணங்கியவுடன் ஒர் கண் ஒளிபெற்று, அவரிடம் மற்றொரு கண் ஒளி வழங்குமாறு வேண்ட, ஒரு மண்டலம் இங்குத் தங்கி வழிபட மற்றொரு கண் ஒளி வரும் என்று கூற, அவ்வாறேசெய்ய அரசன் மற்றொரு கண்ஒளியும் ஏனையோர் பேசும் திறமையும் மீளப்பெற்றார்கள் என்பது வரலாறு. அரசன் தன் பிழையை உணர்ந்து ஞானசாரியஸ்வாமி களிடம் விக்ஞாபனத்தோடு தன் சந்தேகத்தைக்கேட்டான். தாங்கள் நான்காவது வர்ணத்தைச்சார்ந்தவர் என்றும் தங்களுக்கு சந்நியாச ஆசிரமத்தில் அதிகாரம் இல்லை என்றும், தன் சமீபத்தில் உள்ளார் கூறித் தன்னை மயக்கிவிட்டார்கள்; இவ்வுண்மையைத் தனக்கு அனுக்கிரஹம் செய்ய வேண்டும் எனப் பிரார்த்தித்தான், அவரும் திருவுளம் கொண்டு, சைவாகமப் பிரமாணம் மற்றும் புராண, இதிகாசங்கள் முதலிய பிரபலமான க்ரந்தங்களில் இருந்து சைவ சந்நியாசி சமாதி விதியீருக அமைத்து நான்கு வர்ணத்திற்கும் நான்கு ஆசிரமங்களும் உண்டு எனப் பிரபல பிரமாணங்களோடு சங்கோத்தரமாக (வினு – விடையாக) வருணாச்ரம சந்திரிகை என்ற நூலைத் தொகுத்து அருளினார் என்பது வரலாறு. நூல் செய்ய வேண்டிய அவசியம் இவ்வரலாற்ருல் நமக்கு நன்கு புலனாகிறது.

பல்வேறு இடங்களில் ஆகமங்களில் அருளப்பட்டு இருக்கும் செய்திகளின் சாரத்தை ஒருசேரத்திரட்டி எளிய இனிய சமஸ்க்ருத பாஷையில் இந்நூலைச்சமைத்து இருக்கிறார். இந்நூலில் அறிவிக்கப் படும் கருத்துகள் எல்லாம், ஆகமங்களினால் மற்ற புராண, சூதசம்ஹிதை முதலான 85 நூல்களினாலும் அருளப்பட்டவை என்பதைத் தெளிவாகக் காட்டியே இந்நூலைக் கொண்டு செலுத்து கிறார். இந்தவகையில் இந்த நூல் ஒரு சிறந்த தொகுப்பு நூலாகும் என்று கருத இடமுண்டு.

" சைவாகம சாஸ்த்தி ரேப்ய: ஸங்க்ரு ஹ்யா:
ஆச்ரமிணாம் முதே "

என்று முகவுரையில் கூறப்படுவதிலிருந்து இது தொகுப்பு நூல் என்று நாம் உணர முடிகிறது.

**நூலில் கூறப்படுள்ள விஷயம்:-(முதலில் ஆகமப்ரமாணம்)**

(1) சைவாகமத்தில் ப்ரசித்தமான சகல கர்மாக்களிலும் நான்கு வர்ணத்தார்களுடைய நான்கு ஆச்ரமங்களில் அதிகாரம் உண்டெனக் கூறப்படுகிறது.

வாயு சம்ஹிதை என்ற நூலில் சிவாகம ஞானமே சாலச் சிறந்தது என்று கூறப்படுகிறது.

''சிவாகமோக்தம் யது ஞானம் ததத்ர ஞானமுச்யதே
ஸ்ரீ கண்டேந சிவே நைவ சிவாயை ஸ சிவாகம்''

என்று கூறப்பட்டுள்ளது. மேலும் புராணங்களைக் காட்டிலும் இந்த காமிகாதி ஆகமங்கள் உயர்ந்தது எனச் சொல்லப்பட்டு இருக்கிறது. சூதசம்ஹிதையில் 'காமிகாதி இருபத்தெட்டு ஆகமங்களும் பரமேஸ்வரனுடைய முககமலங்களிலிருந்து வெளிவந்தன எப்படி நான்கு வேதமும், தத்புருஷ, அகோர' வாமதேவ, ஸத்யோஜாத முகங்களில் இருந்து முறையே, ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள் வெளிவந்ததோ அதுபோல, என்று ஹாலாஸிய மஹாத்மியத்தில் கூறப்பட்டுள்ளதை இந்நூல் கூறுகிறது. இதற்குச் சான்று காமிகாகமத்தில் சொல்லப்பட்டு இருக்கிறது என்று உள்ளது.

'' ஈசான வக்த்ராது ஊரித்வஸ்தாது ஞானம் யத் காமி காதிகம்।
ரிக்யஜுஸ்ஸாமாதர்வர்ச்ச புருஷாத்யாநதொத்பவா: ''॥

காமிகாகமத்தின் வாக்கியத்தை இங்கு மேற்கோள் காட்டியுள்ளார்கள். மேலும், வேதநெறியில் பின்பற்றி வாழ்கின்ற ஒரு மனிதன் அதிலிருந்து நழுவி விட்டால் அதற்குப் பிராயச்சித்தம் தேடிக்கொள்ளத் தந்திரம் என்ற ஆகமத்தை அனுஷ்டிக்க வேண்டும் என வலியுறுத்துகிறது. இதற்குச் சான்றாக சூத சம்ஹிதையில் இருந்து. ''வேதேதராகமம் கத்வா ததுக்தம் தர்மமாசரேது'' என்பதை மேற்கோள்களாகக் காட்டுகிறார். மேலும் வேதம்அபௌருதேயம். ஆகமம்பௌருதேயம். வேதத்திற்குப் புறம் பானது என்று சிலர் கூறுவார்கள். அது முறையன்று. ஆகமம் அனுசாரியன்றும்,வேதத்திற்குப்புறம்பானதுஎன்றும்கூறப்பட்டமை இங்கு நாம் நினைவு கொள்ளத்தக்கது. வேதமார்க்கத்தில் இருந்து நழுவியவர்களுக்குத் தந்திரம் என்று சொல்லக்கூடிய ஆகமத்தில் அதிகாரம் உண்டு. அதுவும் வேத மார்க்கத்தை அனுசரித்தவை 28 ஆகமம் தான். வேதமார்க்கத்தை அனுசரிக்காத ஆகமங்கள், வாமம், பாசுபதம், லாகுளம், பைரவம் என்ற நான்கே ஆகும். இதை நாம் ஏற்றுக்கொள்ளத் தகுந்தது அல்ல. ஏன் என்றால் கௌதமமுனி

சாபத்திற்கு உட்பட்டவர் அதை அனுஷ்டிக்கக் கடவர் என்ற சாபம் ஒன்று உள்ளது. ஆகையினால் காமிகாதி இருப்பத்தெட்டு ஆகமங் களும் வேதானுசாரிகள். இந்த ஆகமங்கள் 'ஸ்வதந்திரம்' என்றும், இதரம் என்றும் இருவகையாகப் பிரிக்கப்படுகின்றன. அதாவது ச்ரௌதம், அச்ரௌதம் எனக்கூறுவர். காமிகாதி 28 ஆகமங்கள் ச்ரௌதம்; மற்றவை அச்ரௌதம்.

ஸூதகீதையில் "ச்ரௌதாச்ரௌத விபேதேந த்விதஸ்து சிவாகம" என்று கூறப்பட்டுள்ளது.

ஆகமநூல் பிரமாணமாகும், ஏன் என்றால் வேதம் எவ்வாறு நித்யமோ அதுபோல் ஆகமமும் நித்யமாகும். இது எவ்வாறு என்று காமிகாமத்தில் கூறப்பட்டுள்ளது.

" ஈசானவக்த்ராதூர்த்வஸ்தாது ஞாநம்யத் காமிகாதிகம்,
ரிக் யஜுஸ்ஸாமாதர்வச்ச புருஷாத்யாந நொத்பவே "

என்று வேதம் பிரமாணம்போல் ஆகமமும்பிரமாணமாகும். வேதத்தில் அதிகாரம் அற்றவர்களுக்கு வேத அனுசாரியான ஆகமத்தில் அதிகாரம் கூறப்பட்டுள்ளது. வேதமார்க்கத்தைப்பின்பற்றமுடியாத வர்கள் தந்திரம் என்று சொல்லக்கூடிய ஆகம மார்க்கத்தில் பின் பற்றத்தகுதி உடையவர் ஆவார்கள். குறிப்பாகச் சொல்வோமாகில் நான்காம் வருணத்திற்கு இதில் அதிகாரம் உண்டு என இந்நூல் வலியுறுத்துகிறது. இந்நூலின் நோக்கமும், குறிக்கோளும் அதுவே. ஆகமம் வேதாநுசாரி என்றும், வேதாநநுசாரி என்றும் இருவகை யாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. காமிகாதி28 ஆகமங்களும்வேதாநு சாரிகள். வாமபாசுபதாதி ஆகமங்கள் வேதத்திற்குப் புறம்பானதால் அதை வேதாநநுசாரிகள் என்று கூறுவார்கள். அவைகள் கௌதம முனி சாபத்திற்கு இலக்கானவர் அனுஷ்டிக்க கடவர். மேலும் காமிகாதி ஆகமங்கள் இருப்பத்தெட்டும் ச்ரௌதம் என்றும், வாம, பாசுபத, லாகுள, பைரவாதி ஆகமங்கள் அச்ரௌதம் என்றும் பாகுபடுத்தப்பட்டுள்ளது. இவ்விஷயம் ஸூதகீதையில் கூறப் பட்டுள்ளது.

" ச்ரௌதாச்ரௌததை விபேதேந த்விதஸ்து சிவாகம்,
ச்ருதி ஸாரமயச்ச்ரௌத: ஸபுநர் த்விதொமத: "

காமிகாதி 28 ஆகமங்கள், வேத மார்க்கத்தைப் பின்பற்றுவதால் ஸ்வதந்திரம் என்றும், வாமாதி ஆகமங்கள் வேதாநநுசாரிகளாக இருப்பதால் அவைகள் அச்ரௌதம் என்றும் பாகுபாடு அடைந்தன. வேதத்திலும், ஆகமத்திலும் அதிகாரம்உடையவர் வேதாசாரத்தை

முன்னும், ஆகம ஆசாரத்தைப் பின்னும் அனுஷ்டிக்க வேண்டும். வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் விரோதம் கிடையாது. இக்கருத்தானது சைவ புராணத்தில் கூறப்பட்டுள்ளது. அஃது ஆவது

" வைதிகஸ்து புராக்ருத்வா, பச்சாது சைவம் சமாசரேது
ஜதி இதி வர்ணாச்ரமாசாராநு மநஸாபி நலங்கயேது "

என்று கூறப்பட்டமையால் வைதிகம், ஆகமம் இரண்டையும் கடைப்பிடிக்கிறவர்கள், வைதிக கர்மாவை முன்பும், ஆகமத்தைப் பின்பும் பின்பற்றவேண்டும். இதனால் வைதிக கர்மாவை (அதாவது வேதத்தில் கூறிய கர்மாவை) அனுஷ்டிக்க முடியாத நான்காம் வர்ணத்தவருக்குப், ஆகமத்தில் அதிகாரம் உண்டு எனவும், வேதானுசாரிகளாக, சைவாகம ஆசாரியர்கள் அனுஷ்டிக்க தகுதி உடையவர்கள் எனவும் தெரிய வருகிறது. வேத நிந்தை செய்தல் கூடாது. அதே போல் ஆகமநிந்தையும் செய்யக்கூடாது. இன்னும் கூறப்போனால் வேதத்தைக் காட்டிலும் மிகவும்உத்கிருஷ்டமாக இருப்பதால், ஆகமநிந்தை செய்தாருக்குப்ராயச்சித்தம் இல்லை எனக் கூறப்படுகிறது. இவ்விஷயம் வாயுசம்ஹிதையில் கூறப்படுகிறது.

ஸௌபரபேத ஆகமத்தில் இவ்விஷயம் நன்கு கூறப்பட்டுள்ளது. "யாதநாஸ்தா நமாச்ரித்ய பதந்தி நரகார்வை" என்று மேலும் ஆகமப்ரமாணயத்தை நோக்குங்கால், சிஷ்டர்களான சநகாதி முனிவர்களாலும் ஆகமமானது அனுஷ்டிக்கப்பட்டு உள்ளது. இவ்விஷயம் உபதேச காண்டத்தில் சொல்லப்பட்டுள்ளது.

" புராப்ரம்மாத்மஜா புண்யா ஸநகச்ச சநாதந:।
ஸநந்தநச்ச பகவாந் ஸநாதிபூர்வகுமாரக:॥

என்று கூறப்பட்டுள்ளது. இதனால் சனகாதி முனி சிரேஷ்டர்களும் இராமன், கண்ணன் முதலியவரும் சிவதீக்ஷை பெற்றுச் சிவாகம மார்க்கத்தால் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து பூசித்தார்களெனப் புராணங்கள் பலவும் கூறுகின்றன.

சிலர் இராமன் முதலியவர்கள் சிவபூஜை செய்தது உண்மை. ஆனால் ஸ்மிருதி மார்க்கத்தைத் தழுவிச் செய்தார்கள் என்றும், ஆகம மார்க்கம் அல்ல என்றும் கருதுகிறார்கள். ஸ்மிருதியை அனுசரித்துச் செய்வது வைதீகம் என்றும், ஆகமத்தில் கூறியபடி செய்வது தாந்த்ரிகம் என்றும் கூறப்படும். வைதிக முறைப்படிச் செய்வது தன் பொருட்டாகும். பிறர் பொருட்டு ஆகாது. தாந்திரிகமோவெனில் தன் பொருட்டும், பிறர்பொருட்டும் ஆகும்.

இராமன்முதலானோர் பூசித்த சிவமூர்த்தங்கள் அவர்களுக்குப் பலன் தந்ததுமல்லாமல் இன்றும் எல்லோரும் வழிபடுகிறார்கள். அதனால் இது தாந்திரிக பிரதிஷ்டையே எனக் கூறுகிறார் இந்நூல் ஆசிரியர் ஆகம ஆதாரத்துடன். ஆகையினால் வைதிகப்ரதிஷ்டையைக் காட்டிலும் தாந்திரிக (ஆகம) பிரதிஷ்டை சாலச் சிறந்தது. ஆகையினால் வைதிகம், தாந்திரிக பேதமாக இருவகைப்படும். இவ்வாறு வைதிகி, தாந்ரீக முறைகளைக்கூறி, அதற்கு யார் எதில் அதிகாரிகள் என்பதை மேலும் விளக்குகிறார்.

"வைதிகீ தாந்திரிகீசேதி த்விஜேந்திரா; தாந்திரீகீது சா:1
தாந்திரிகஸ்ய ஏவநாந்யஸ்ய வைதிகீ வைதிகஸ்ய ஹி"

என்று ஸூத சம்ஹிதையில் கூறியபடி ஆத்மார்த்தலிங்க பூஜையில் வைதீகருக்கும், ஆத்மார்த்த, பரார்த்த பூஜையில் ஆதிசைவருக்கும் அதிகாரம் உண்டு எனத் தெரியவருகிறது. மேலும், ஸூதஸம் ஹிதையில்

"தந்திரோக்தேன ப்ரகாரேண, தேவதாயா ப்ரதிஷ்டிதா,
ஸா ஸீவந்திரியா ஸீஸேவ்யாச வந்தநீயா சவைதினக:"1

என்ற செய்யுளிலிருந்து ஆகமோக்த மார்க்கமாக எந்த தேவதைத் ப்ரதிஷ்டை செய்யப்படுகிறதோ, அது வைதிகர் முதலிய எல் லோராலும் வணங்கத் தகுந்தது என்று நமக்குத் தெரியவருகிறது. சிவாகம ப்ரதிஷ்டையின் உயர்வைப் பற்றி ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களும் சிவார்ச்சன சந்திரிகையில் நன்கு எடுத்துரைக்கின்றார். இவரும் சிவாகம ப்ரதிஷ்டையர். அதிகாரம்உண்டு என நிச்சயமாக கூறுகிறார். ஆகையினால் வேதாநுசாரி ஆகமத்தினுடைய ப்ரமாண்யம் நிரூபிக்கப்பட்டது.

இனி அந்த ஆகமங்களில் கூறப்பட்ட தீக்ஷாகார்யத்தில் அதிகாரத்தைப் பற்றி விளக்குகிறார்.

ஏன் என்றால் யாதொரு தீக்ஷையானது செய்யப்படவில்லையோ, அது இல்லாமையால் எதிலும் அதிகாரம் இல்லை என்பதை மற்ற பல சான்றுகளுடன் கூறுகிறார்.

இவ்விஷயம் ஸ்ரீமத் பராக்யம் என்ற நூலில் இவ்வாறு கூறப் பட்டுள்ளது.

" தீக்ஷிதோ யோ அதிகாரீஸ்யாது
யோக்யாஸ்தா நார்ச்நா திஷ்வபி "

எந்த ஒரு அதிகாரி ஆனவர் தீக்ஷை செய்யப்பட்டவராக இருக்கிறாரோ, அவர் ப்ரதிஷ்டை, அர்ச்சனை முதலிய சகல கார்யங்களிலும் அதிகாரம் உடையவர் ஆகிறார் என்றுதெரிகிறது.

இந்த சிவதீக்ஷையே மோட்சமார்க்கத்தை அடைய விரும்புகிறவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கவல்லது என தீக்ஷையின் முக்கியத்தை வலியுறுத்துகிறார். சற்றே, நாம் விரிவாகப் பார்க்க வேண்டிய இடமாக உள்ளது. இந்த தீக்ஷை,

" அத்வ சுத்தீம் விநா யேச முக்திமிச்சந்தி மநிவா: "

என்று தொடங்கி,

" ஷட்த்வ சுத்தியுக்தாத்மா முக்திமேதி நத்யான்யதா "II

என்று இறுதியாகக் கூறப்பட்டதிலிருந்து அத்வ சுத்தி செய்து கொண்டவர்களுக்கு தீக்ஷையினால்தான் மோக்ஷமே அன்றி வேறு எந்தக் காரியத்தினாலும் இல்லை என்று நமக்கு உணர்த்துகிறது.

அந்த தீட்க்ஷையோவெனில் நான்கு வர்ணத்தில் உள்ளவர்களுள் சமயாசார சமர்த்தரோ அல்லது அசமர்த்தர்களோ, மந்தன், குருடன், செவிடோன், ஊமையாயினும் மலபரிபாக சத்தி நிபாதமுடையார்க்கே உரித்தது ஆகும். தீக்ஷை பெற்றவனே வீடு பேறடைவன்.

கர்பாதானாதி சம்ஸ்காரஸ்கள் த்விசாதி மூவர்ணத்தார்க்கே விதித்தனன், இந்த தீக்ஷையும் அவ்வாறுதான் நான்காம் வர்ணத்தாருக்கு விதிக்கவில்லை என்றால் அதற்கு (தீக்ஷை உண்டு என்பதற்கு) தகுந்த காரணம் கூறுகிறார். எந்த வர்ணத்தாராயினும் மலபரிபாகன் சத்திநிபாதமுடையார்க்கே செய்யப்படும். ஆன்ம சுத்தியாதலால் இது நான்காம் வர்ணத்தாருக்கும் உரிமை உண்டு. தீக்ஷை என்பது ஆன்மாவைக் குறித்துச் செய்யும் ஓர் காரியம். இவ்விஷயம் சிந்தாந்த சாராவளியின் உரையில் கூறப்பட்டுள்ளது.

சித்தாந்த சாராவளியில், தீட்சை, ஆன்மசுத்தி நிலைகுறித்துச் செய்யப்படுவது என்பதை,

" ந ஜாதேர் ந சரீரஸ்ய ஸம்ஸ்காரः ப்ராணிநோமத: 1 "

என்றும், காலோத்தரத்தில்,

" ந சரீரஸ்ய ஸம்ஸ்காரோ ந ஜாதேர் ந சகர்மண: 1
ஆத்மன: காரயேத்தீக்ஷாம் அநாதிமலகுண்ட நீம் 1
நிரோதஸ்தஸ்ய கர்த்தவ்யோ மந்த்ரைச்ச விஷசக்திவத் 11"

இவ்வாறும் கூறப்பட்டுள்ளது. மேலும் சுப்ரபேத ஆகமத்தில்,

" சாதுர்வர்ண்யாநி சார்யாநி சிவயோகேது தீக்ஷயேத் 1
அநுலோமான் ப்ரதிலோமாத் ஸீக்ஞாத்வா தீக்ஷயோத்குரு:11"

நான்கு வருணத்தாருக்கும், மற்றும் அந்நியருக்கும் சிவனிடத்தில் பக்தியோகம் இருக்குமேயாகில் தீக்ஷை செய்யலாம் எனவும், அநுலோமரையும், ப்ரதிலோமரையும் நன்குக உணர்ந்து குருவானவர் தீக்ஷைசெய்யவேண்டும் எனவும் கூறப்படுகிறது. அதனுல் தான் ஏழுவித சைவர்களுக்குள் அந்த்திய சைவர்களாக இருப்பினும் தீட்சா சம்ஸ்காரத்தில் உரிமை உண்டு எனவும் தெரியப் படுத்துகிறது. ஏழுவித சைவர்கள் என்பது பற்றி வீரதந்திரத்தில் பாகுபடுத்திக் கூறப்பட்டுள்ளது.

" சைவாஸ்ஸப்தவிதாக்ஞேயா: தேஷாம் பேதம் ஸ்துணஷ்வச:1
அநாதி சைவ: ப்ரதம: ஆதிசைவோ த்விதீயக: 11
த்ரி தீயஸ்து மஹாதேவ: சதுர்தாச்சாநுசைவக: 1
பஞ்சமோவாந்சுரசைவ; ஷஷ்ட: ப்ரவர உச்யதே 1

ஸப்தமச்சாந்த்ய சைவச்ச சைவாநாம் பேதமோரித: 1
அநாதி சைவஸ்ஸசிவ: ஆதிசைவ சிவத்விஜ: 1

விப்தச்சைவ மஹாசைவ: க்ஷத்ரியோ வைசிய ஏவ ச I
அனுசைவஸ்ஸமாப்யாத: சூத்ரச்தாவாந்தரஸ் மருத: I
ஸ்வர்ணம்பஷ்மத்யாஸ்து குலால: ப்ரவர ஸ்ததா I
பாரசைவாஸ்ஸமாவ்யாதா: ப்ரோச்யதே ஸகலம் மயா II
அந்யாஸாமேவ ஜாதீநாம் அந்த்ய சைவத்வமுச் யதே II"

1. அனாதிசைவர், 2. ஆதிசைவர், 3. மஹாசைவர், 4. அனுசைவர், 5. அவாந்திரசைவர், 6. பிரவரசைவர், 7. அந்த்திய சைவர் ஆகியோர் ஏழுவித சைவர். இவர்களில்,

அனாதிசைவர் சிவபெருமான். ஆதிசைவர் சிவாசாரியர். மஹாசைவர் மஹாப்ராம்மணர். அனுசைவர் க்ஷத்திரியனும் வைசியரும்; அவாந்திர சைவர் சூத்திரர்; பிரவரசைவர் என்பவர் கலப்பால்பிறந்தவர், அந்த்தியசைவர்என்பவர் மேற்கூறப்பட்டவர் அல்லாத ஏனையோர். சைவத்தை ஏழுவிதமாகப் பிரித்து, யார் யார் எவ்வகைச் சைவர் என்பதும் கூறப்பட்டுள்ளது.

நான்காம் வர்ணத்தவராகிய சூத்திரற்கும் சிவதீட்சையினால் இருபிறப்பாளராரகும் தன்மையுண்டு. தீட்சைசெய்து கொண்டவருக்கு, முன் உள்ள பெயர் கிடையாது.

அந்தத் தீட்சைதான் எத்தனை விதம்? பொதுவாக ஏழு வகைப்படும்.

1. நயன தீக்ஷை, 2. பரிச தீக்ஷை, 3. வாசிக தீக்ஷை, 4. பாவனா தீக்ஷை, 5. சாஸ்திர தீக்ஷை, 6. யோக தீக்ஷை, 7. ஔத்திரி தீக்ஷை என்பன அவை.

## 1. நயன தீக்ஷை :

ஆசாரியன் சிவோகம் பாவனை செய்துகொண்டு தன்னுடைய கண்களைச் சிறிது திறந்து மாந்திரீகனாயிருக்கிறவன், கருட பாவனையினால் சர்ப்பத்தால் தீண்டப்பட்டவனை விஷம் நீங்குமாறு பார்ப்பதுபோல் சிஷ்யனைச் சிவபாவனையினால் பார்த்துப் பாசநீக்கம் செய்வதாகும்.

## 2. பரிச தீக்ஷை :

குரு தன்னுடைய வலக் கரத்தைச் சிவனுடைய கரமாகப் பாவித்து, அவ்வாறே அர்ச்சித்துப் பின்னர் சிஷ்யனுடைய சிரம் முதலாக எல்லா அங்கங்களையும் அந்தக் கையால் பரிசிப்பதாகும்.

### 3. வாசிக தீக்ஷை :

ஆசாரியன் சிவபாவனை (சிவோஹம்) செய்துகொண்டு சிஷ்யனைச் சிவனுடைய திருநாமங்களை ஜபிக்கும் படிக்கும், மனனம் பண்ணும் படிக்கும் செய்வதாகும். எதுபோல என்றால் ஸ்ரீ மாணிக்கவாசகர் சிவபெருமானுடைய திருநாமங்களைச் சொல்லிக் கொடுத்து இராஜகுமாரத்தியின் ஊமையைப்போக்கு வித்தல் போல் ஆகும்.

### 4. பாவனா தீக்ஷை :

ஆமையானது தன்னுடைய முட்டையை நினைத்துப் பிள்ளையை வெளிப்படுத்துவது போல, குரு தன்னுடைய சிவோகம் பாவனையாகிற மனோவியாபாரத்தால் சிஷ்யனை நினைத்துப் பாச நீக்கம் செய்வதாகும்.

### 5. சாஸ்திர தீக்ஷை :

சைவ சாஸ்திரங்களைப் பிழையற, சிஷ்யனுக்குச் சொல்லி வைப்பதாகும்.

### 6. யோக தீக்ஷை :

குரு, நால் இதழ்த்தாமரையான மூலாதாரம் ஆறு இதழ்த் தாமரையான சுவாதிஷ்டானம், பத்து இதழ்த் தாமரையான மணி பூரகம், பன்னிரண்டு இதழ்த்தாமரையான அநாகதம், பதினாறு இதழ்த்தாமரையான விசுத்தி, இரண்டு இதழ்த்தாமரையான ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களையும் சிஷ்யனுக்கு வர்ணனு குணமாகத் தரிசிப்பித்தலாகும்.

### 7. ஔத்திரி தீக்ஷை :

குண்டமண்டல வேசிகைகளுடன் கூடியதாகும். இந்த ஔத்திரி தீக்ஷையானது சற்குருவினால் கலா சோதனையுடன் செய்யப்பட்டு, சஞ்சிதவினைகளை எல்லாம் போக்கும். சௌபாக்கியத்தைக் கொடுக்கும். அணிமா முதலிய எட்டுச் சித்திகளையும்தரும். உலகத்தில்உள்ள புண்ணியங்களுக்கு எல்லாம் மேலானது. கடைசியில் மோக்ஷத்தையும் கொடுக்கும். இவ்வாறு இதன் பெருமை காமிகாகமத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. முன் சொன்ன நயனாதி ஆறு தீக்ஷைகளும் ஔத்திரிதீக்ஷைக்கு அங்கமாய் அதனுள் அடங்கும். ஆகையினால் ஔத்திரி தீக்ஷையே மேலானது.

மேலும் தீக்ஷா விசேஷங்களை நோக்குங்கால், தீக்ஷை பௌதிகதீக்ஷை என்றும், நைஷ்டிகீ தீக்ஷை என்றும் இருவிதமாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. அவற்றுள் முதலாவதான பௌதிக தீக்ஷை லோக தர்ம்மினி என்றும் நைஷ்டிகீ என்பது அலௌகிகீ என்றும் கூறுவதுஉண்டு. இதற்கே சிவதர்மினி என்றும் சொல்வது உண்டு. முன் சொன்ன பௌதிகி தீக்ஷையானது சமயாதி யநுஷ்டான வல்லமையுள்ளவர் விஷயத்தில் ஸபிஜை ஸாபேக்ஷை என்றும், நைஷ்டிகீ சமயானுஷ்டான வல்லமை இல்லாத பாலாதி விஷயத்தில் நிர்பிஜை, நிரபேக்ஷ என்றும் கூறுவது உண்டு. பொது வாக தீக்ஷை என்ற சொல்லிற்கே, தீ என்பது தாளம், க்ஷி என்பது க்ஷயம். புத்தி முக்தி தாளமும், பாசக்ஷய முந் செய்வதால் தீக்ஷை எனப்படும்.

ஆச்ரம பேதத்தினல் தீக்ஷா பேதம் உண்டு என்றும் கூறப் படுகிறது.

சிகாச்சேதம் இல்லாத தீக்ஷை லோக தர்மினி என்றும் ஞான ரத்னவளியில் கூறப்பட்டது.

" சிகாச்சேதோ ந யத்ராஸ்தி தீக்ஷா ஸாலோகதர்மினி,
சிகாகண்டந ஸம்யுக்தா தீக்ஷா ஸா சிவதர்மினி "

என்று கூறப்பட்டுள்ளது.

ஆகமாந்தரத்திலும், சிகாச்சேதம் உடையது சிவதர்மினி என்றும், சிகாச்சேதம் இல்லாததது லோக தர்மினி என்றும் கூறப் படுகிறது.

" தீக்ஷயா லோகதர்மின்யா க்ரஹஸ்தான் தீக்ஷயேத்குரு:I
ததா வை சிவதர்மின்யா தீக்ஷயேச்ச தபோதனன் II
சிகாச்சேதஸமாயுக்தா தீக்ஷா ஸா சிவதர்மினி
சிகாச்சேதம் வினு யத்ர க்ஞேயா ஸா லோகதர்மினி "

என்று ஆகமாந்தரத்தில் கூறப்பட்டுள்ளதை நாம் இங்குக் காண முடிகிறது. பிறகு இந்த தீக்ஷையானது நிராதாரை என்றும் ஸாதாரை என்றும் இருவகையாகும். அவற்றுள் விஞ்ஞான கலர் ப்ரளயாகலருக்கு சாக்ஷாத் பரமசிவனே நேரில் தாமே செய்யும் தீக்ஷையானது நிராதாரையாகும். ஆதாரம், அதிஷ்டாநம் ஸகல ஆன்மாக்களுக்கும் குருமூர்த்தியை அதிஷ்டித்துப் பரமசிவன் செய்யும் தீக்ஷை ஸாதாரை என்பதாகும்.

சிவன் இன்றி மற்றொருவர் பாசமோசநம் செய்ய மாட்டா ராதலால் சகலருக்கும் பரமசிவனே குருமூர்த்தியை அதிஷ்டித்து தீக்ஷை செய்கிறார் என்பது இதிலிருந்து நமக்கு வெளிப்படுகிறது. மேலும் இந்த தீக்ஷா சம்ஸ்காரமானது ஆன்மாவிற்குச் சிவத்வ முண்டாகும் நிமித்தம் சுத்தி செய்யும் சம்ஸ்காரமாகும். இந்த தீக்ஷையானது தீக்ஷைபெற்ற நான்கு வர்ணத்தார்களுக்கும் மிகுந்த உயர்வைக் கொடுக்கிறது. இதைப்பற்றி சைவபுராணத்தின்,

"கதம் சூத்ரஸ்ய சூத்ரத்தம் த்விஜத்வம் ப்ராமணஸ்ய ச।
சிஸம்ஸ்கார ஸம்பந்தாத் ஜாதிபேதோ ந வித்யதே।
சிவ தீக்ஷாதி ஜாதஸ்ய பூர்வஜாதிம் ந சிந்தயேத்।
ஸம்ப்ரதிஷ்டிதலிங்கேஸ்து ந யயா பூர்வபாவனா॥"

என்ற வாக்கியங்களிலிருந்து சிவசம்ஸ்காரத்தினால் ஜாதி பேதம் கிடையாது என்றும், சிவதீக்ஷை அடைந்த வர்ணத்தாருக்கு முன்பு உள்ள வர்ணபேதம் கிடையாது என்றும், அது எதுபோல என்றால் ப்ரதிஷ்டைசெய்யப்பட்டலிங்கத்தில் இதற்குமுன்உள்ள அதனுடைய சிலாதி பாவம் எப்படி நீங்குமோ அதுபோல என்றும் உதாரணத்துடன் கூறுகிறார்.

இதனால் தீக்ஷை செய்துகொண்ட நான்காம் வர்ணத்தினருக்கு முன்புள்ள வர்ணமானது விலகிவிடும் என்று ஸ்ரீ மந்மதஸ்கந்தமும் கூறுகிறது.

"சிவவச்சிவ பக்தஸ்து த்ருஷ்டவ்யச் சிவகாங்க்ஷிபி:।
ஸம்ஸ்க்ருதாச்ச சிவைர் மந்த்ரைரர் குருணாமந்தச மூர்த்தினா॥
வாகிஸ்வர்ப ஸம்பூதா: ஸர்வே ப்ராப்தாவரா நரா:।
யதோக்தா சிவஸம்ஸ்கார பவித்ரி க்ருதமூர்த்ய:॥
ஸர்வே ஸமான தாமாச்ச ததாப்யேவம் விதீயதே।"

என்று கூறப்பட்டதிலிருந்து சிவனைப்போலச் சிவபக்தர்களும்பார்க்கத்தகுந்தவர்கள். மந்த்ரவடிவானகுருவானவர் சிவமந்திரங்களால் சம்ஸ்காரம் செய்வதால், சிவசம்ஸ்காரத்தினால் பரிசுத்தமான சரீரத்தை அடைகிறார்கள் என்பது சைவத்தின் கோட்பாடு ஆகும்.

"இந்தனம் வஹ்னி ஸம்யோகாத் வ்ருக்ஷநாம ந வித்யதே।
கதம் சூத்தரஸ்ய சூத்ரத்வம் த்விஜத்வம் ப்ரமணஸ்ய ச।
சிவஸம்ஸ்காரஸம்பந்தாத் ஜாதிபேதோ ந வித்யதே॥"

என்று சுலோகத்தில் கூறப்பட்டப்படி, எப்படிவிறகானது அக்னியின் சேர்க்கையினால் வ்ருக்ஷம் (மரம்) என்று பெயர் இல்லையோ, அதே போல் சிவ சம்ஸ்காரசம்பந்தத்தினால் ஜாதி பேதமானது தெரியாது.

மேலும் சிவதீக்ஷை செய்து கொண்ட பிறகு முன் உள்ள பெயர் நீங்கி வேறு பெயர் வந்து விடும். நான்கு வர்ணத்தாருக்கும் பெயரின் முறையை சாராவளியில் நன்கு கூறுகிறார்.

சமய தீக்ஷை செய்யும் பொழுது, குருவானவர், சிஷ்யனுடைய இரண்டுகண்களையும், ஒரு வெண்பட்டினுல் நேத்திர மந்திரத்தினுல் கட்டி, சிஷ்யனுடைய கைகளில் புஷ்பத்தைக் கொடுத்து அஞ்சலி ஹஸ்தத்தோடு, பிடித்து அழைத்துக்கொண்டு தீக்ஷாமண்டபத்தை வலமாக வந்து சிவனிடத்தில் சமர்ப்பிக்கச் செய்வார். (காமிகவசப்படி புஷ்பசமர்ப்பணம் ஆனபிறகு நேத்திர பந்தம் விட வேண்டும்.) அப்படி சமர்ப்பணம் செய்யப்பட்ட புஷ்பம் எந்த இடத்தில் விழுந்ததோ அந்த முகத்தினுடைய நாமதேயத்தை வைக்கவேண்டும். உதாரணமாக ஈசானக்முகத்தில் விழுந்தால் முதல் வர்ணத்தாருக்கு ஈச்சிவம் என்றும், இரண்டாம் வர்ணத்தாருக்கு ஈசதேவன் என்றும், மூன்றும் நான்காம் வர்ணத்தாருக்கு ஈசகளன் என்றும் நாமகரணம் செய்யவேண்டும் என்று கூறுகிறது. மேலும் ஸ்கந்த காலோத்திரத்தில்,

"ஜாத்யுத்தரண ஹோமம் து ஏனககம் து சதம் சதம்l
தஹோத்வை சூத்ர ஜாதிம் து அனலேனது ஷண்முக:ll
ஸச்சுத்ரத்வம் யோஜயித்வா கிரியாம் வை ஷோதசீம் குரு:l
ஸாக்ஷாத்விப்ரத்வமாபன்னே பக்ஷாத் தீக்ஷாம் குருஷ்வ சl
த்ரைவர்ணிகாதாமேவந்து காரயேத்விதிதா புத:ll"

என்று கூறப்பட்டு இருப்பதால் பதினறு கிரியைகளினுல் நான்காம் வருணத்தாருக்கு அத்தன்மையைப் போக்க ஹோமங்கள் செய்து சற்சூத்திரம் என்ற தன்மையை அடைந்ததாக எண்ணி, பிறகு சாக்ஷாத் விபரத்வம் அடைந்ததாகப் பாவித்து பிறகு தீக்ஷை செய்விக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

பிறகு இந்த வர்ணுச்சிரம சந்திரிகையில், தீக்ஷைப்பெற்று சிவபூஜையில் ஈடுபட்டு உள்ளவர்களுடைய நான்கு வர்ணத்தவர்களுடைய மாஹாத்மயம் கூறப்படுகிறது.

அசிந்தியவிச்வம் என்ற நூலில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

"ஸ்தாவரம் ஜங்கமம் சைவ த்விவிதம் சிவபூஜனம்l
லிங்காதிபூஜனம் சுத்ர ஸ்தாவரந் நாந்திகேஸ்வரll
லிங்கிநாம்பூஜனம் தத்ர ஜங்கமாராதனம் பவேத்l
பூஜாகாலேஷீ ஸாந்நித்தயம் ஸ்தாவரே சிவதேஜஸிl
ஜங்கமே ஸர்வகாலம் ச ஸான்நித்யம் குருதே சிவ:ll
ஜங்கமஸ்தாவமானேன ஸ்தாவரம் நிஷ்பலம் பவேத்ll"

## இதன் தாத்பரியம் :

சிவபூஜை இரண்டு வகைப்படும் தாவர ஜங்கமம் என்று. லிங்க பூஜை தாவரமாகும். சிவபக்தர்களுடைய பூஜை ஜங்கம ஆராதனம் என்று பெயர். ஸ்தாவர லிங்கத்தில் பூஜா காலங்களில்தான் சான்னித்யம். ஜங்கமமான சிவபக்தர்களிடத்தில் எப்பொழுதும் சான்னித்யம், ஆகையால் ஜங்கமமான சிவபக்தர்களை அவமானப் படுத்தினால் அதனால் ஸ்தாவரமான சிவலிங்க ஆராதனை நிஷ்பல மாகும் என்று கூறுகிறது. ஆகையினால் சிவாராதனம், எல்லோ ராலும், எப்பொழுதும் அவசியம் செய்யவேண்டும் என்பதை நமக்கு நன்கு உணர்த்துகிறது. ஆதித்தியபுராணத்தில் கூறும்பொழுது ப்ரானனைக் காட்டிலும் சிவபக்தர்கள்மிகவும் உயர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது,

" இதி ஜானோஹி மத்பக்தான் ப்ரானேப்யோ அபிகரியஸ:"

என்று.

இவ்வாறு நான்கு வர்ணத்தாருக்கும் சிவதீக்ஷயில் அதிகாரம், அதன் மஹிமை,சிவதீட்சை கொண்டவர்களின் பூஜையின் மஹிமை, சிவபக்தர்களின் உயர்வு. இவைகளைக்கூறிய பிறகு அவரவர்களுக்கு ( அந்த நான்கு வர்ணத்தாருக்கும் ) ( நான்கு ஆச்சிரமிகளுக்கும் ) உரிய சௌசம்முதலான நித்ய கர்மானுஷ்டானங்களைக் கூறுகிறார்.

தீட்சை செய்து கொண்ட பிறகு அனுஷ்டிக்க வேண்டிய சௌசம், ஆசமநம் முதலானவைகள் நான்கு வர்ணத்தார்க்கும் சமமாக இருந்த போதிலும், சிற்சில பேதங்கள் காணப்படுகின்றன என்பதைக் கூறுகிறார். ஆச்ரமத்தினால் பேதங்கள் தெரிகின்றன.

இவ்விஷயம் காரணாகமத்தில் நன்கு கூறப்படுகிறது.

" ஏதத் சோசம் க்ரஹஸ்தானம் த்விகுணம் ப்ரும்மசாரிணாம்|
க்ரஹஸ்யாத்ரிகுணம் பிக்ஷோ: யதிநாம் துசதுர்குணம்|| "

க்ரஹஸ்தனைக் காட்டிலும் இரண்டு மடங்கு ப்ரும்மசாரிகளுக் கும் மூன்று மடங்கு வானப்ரஸதனுக்கும், நான்கு மடங்கு சந்நியாசி களுக்கும் சௌசம், தந்ததாவனம் முதலியன விதிக்கப்பட்டுள்ளன. ஸ்நானவிதி கூறும்பொழுது காமிகாகமத்தில் இருந்து மேற்கோள் காட்டுகிறார்.

" ஜலஸ்நானப் புரா க்ருதவா ப்ராதராஸாயமப்யஸேத்|
ஸந்த்யாந்த ரேஷ்வதாக்னேயம் கேவலம் வாஸவாருணம்||
ஆக்நேயம் வாருணஸ்நானாத் அஸம்ரவ்யேய குணாதிகம்|
தஸ்மாத் வாருணமுத்ஸிஜ்ய ஸ்நானமாக்னேயமாசரேத்|| "

ஸ்நானத்தில் வாருணஸ்நானம் பஸ்மஸ்நானம் என்று இரு வகைப்படும். வாருண ஸ்நானத்தைக் காட்டிலும் பஸ்மஸ்நானம் உயர்ந்தது என்று கூறப்படுகிறது. அதிலும் சந்நியாசிகளுக்கு மிகவும் அவசியம் விபூதிஸ்நானம், மேலும் யதிகளுக்கு விபூதியை உத்தூல பூர்வகம், த்ரிபுண்ட்ரதாரணம் கூறப்படுகிறது. அது போல் நைஷ்டிகளுக்கும் கூறப்படுகிறது. ஆச்ரம பேதத்தினல் சந்தியாகால உபாசன வேதமும் காணப்படுகிறது. நியாசபேதமும் கூறப்படுகிறது. ஸ்ருஷ்டி ந்யாச; ஸ்திதிநியாச; ஸம்ஹாரநியாச என்று மூன்று விதிக்கப்படுகிறது. முறையே க்ரஹஸ்தனுக்கு ஸ்ருஷ்டி நியாசமும், பிரம்மசாரிக்கு ஸ்திதிநியாசமும் வானப்ரஸ்தனுக்கும், சந்நியாசிக்கும் ஸம்ஹார நியாசமும் சொல்லப்படுகிறது.

இவ்விஷயம் ஸந்தான ஸம்ஹிதையில் கூறப்படுகின்றது.

" சுருஷ்டிஸ்திதிச்ச, ஸம்ஹாரத்ரிவிதோ ந்யாஸ உச்யதே।
க்ரஹஸ்யஸ்ஸ்ருஷ்டிமார்கேன ப்ரம்மசாரீ ஸ்திதிம் சரேத்।
வானப்ரஸ்தயதீனும் து ஸம்ஹாரந்யாஸ உச்யதி। "

பிறகு யக்நோபவித தாரணம் வர்ணுச்ரம பேதமாக விதிக்கப்பட்டுள்ளது என்றவிஷயமும் இந்நூலில் காமிக, கிரண, ஸுப்ரபேத முதலிய ஆகமப்ரமாணங்களுடன் சற்று விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆச்ரமுறையாக வஸ்திர தாரணமும் சற்றுக் கூறப்படுகிறது. நான்காம் வர்ணத்தவருள் நைட்டிக பிரமசாரியாயின் எக்காலத்திலும் பூணூல் தரிக்க உரியவன் என்று கூறுகிறது. மேலும் ஜடாதாரணம் நான்கு வர்ணத்தாருக்கும் விதிக்கப்பட்டுள்ளது. நான்காம் வர்ணத்தினரானசற்சூத்திரர் ஜடாதாரணத்திற்குரியர் என்று கூறுகிறது இந்நூல்.

சற்சூத்திரா லக்ஷணமும் நன்கு கூறுகிறது. சாதிக்கலப்பில்லாதவரும், சுத்தராகவும், மதுமாம்சாதிகள் இல்லாதவரும்தான் சற்சூத்திரர் ஆவார். இவர் சைவாசாரங்கட்குரியவராவார்.

போஜனாதி விஷயங்களேயும், எந்தவருணத்தினர் வீட்டில் சாப்பிடலாம் என்பதையும் கூறுகின்றது வர்ணுச்சிரம சந்திரிகை.

பிறகு சகலதருமத்திற்கும் சாரபூதமான சிவார்ச்சனரும் நான்கு வர்ணத்தாரும் உரியர் என நன்கு சொல்லப்படுகின்றது. அவ்விஷயங்கள் ஆகமங்களில் விஸ்தாரமாகக்கூறப்பட்டதை இந்நூல் சிற்சில ஆகமங்களிலிருந்து சான்ருக எடுத்துரைக்கிறது.

நான்கு வர்ணத்தாரும் சிவதீக்ஷை செய்து கொண்டாலும் ஆத்மார்த்த பூஜையில்தான் அதிகாரம், பரார்த்த பூஜையில் ஆதிசைவனைத்தவிர ஏனையோருக்கு அதிகாரம் இல்லை என்பதை வலியுறுத்திக் கூறுகிறார். இவ்விஷயம் மகுடன் என்ற ஆகமத்தில் கூறி உள்ளதை இந்நூல் கூறுகிறது.

" விப்ரக்ஷத்ரிய விட்சூத்ரா: தீக்ஷிதாஞ்ச ப்ரவேசகா:।
ஆத்மார்த்தயஜனம் குர்யு: ந குர்யஸ்து ப்ரார்த்தகம்।"

என்றும், ஸுப்ரபேத ஆகமத்தில்,

" திக்ஷிதானாம் த்விஜாதீனாம் ஆத்மார்த்த மனு லோமினாம்।
பரார்த்தமாதிசைவானாம் ஆத்மார்த்தஸ்ஹிதம் பவேத்॥"

என்றும் கூறப்பட்டுள்ளது. மேலும் ரௌரவாகமம்,

" ஆதிசைவேன கர்த்தவ்யம் ஆத்மார்த்தம் ச பரார்த்தகம் "

என ஆதிசைவனால்தான் ஆத்மார்த்தமும், பரார்த்தமும் செய்யத்தகுந்தது என்கிறது. மேலும் ஒவ்வொரு வர்ணத்தாருக்கும் லிங்க பேத முறையை நன்கு இந்நூல் கூறுகிறது. ஸ்திரீகளுக்குக் கூட சிவார்ச்சனுப்ரகாரம் கூறப்பட்டுள்ளது. வித்யாசார சம்ஹிதையில்,

" ஸ்த்ரீணாம்து பார்திவம் ஸபர்த்ரீணாம் விசேஷத:।"

என்ற வாக்கியத்திலிருந்து இதனை நாம் அறியமுடிகிறது. மேலும் எந்த எந்த வர்ணத்தவர்கள் எப்படி அனுஷ்டானம் செய்ய வேண்டும் என்பதில்,

" க்ஷத்ரியச்சைவ வைசியச்ச தத்வதேவ ஸமாசரேத்।
கேவல் சூத்திரஜாதிஸ்து ஆகமோக்தம் ஸமாசரேத் "
இதரேஷாம் ச சைவானாம் தூஷ்ணீமாசார உச்யதே॥ "

க்ஷத்திரியனுக்கும், வைச்சியனுக்கும் சிவதந்திர முறைப்படியும், சற்சூத்திரர்களுக்கு ஆகமோக்தமாகவும், மற்றவைசவர்களுக்கு மௌனமாகவும், ஆசாரம் சொல்லப்பட்டுள்ளது. பிறகு சந்தியா வந்தனம் போல, சிவார்ச்சனையிலும் கிரஹஸ்தர்களுக்குக் காலநியமம் கூறப்பட்டுள்ளது. சந்நியாசிகளுக்குக் காலநியமம் இல்லாததால் எப்பொழுதும் சிவார்ச்சனை செய்யலாம் என நிர்வாச காரிகையில் கூறப்பட்டுள்ளது. இவ்விஷயம் சோமசம்பு பத்ததியில்

" முமுக்ஷோஸ்ஸர்வதா சஸ்தா சிவபூஜா ந வார்யதே|| "

என்று கூறப்படுகிறது.

ஏன் என்றால் நித்யமே யதிகள் பரிசுத்தமாக இருப்பதால் அவ்வாறு கூறப்பட்டுள்ளது.

எல்லா வர்ணத்தில், எல்லா ஆச்ரமிகளுக்கும் சிவபூஜை செய்யத்தகுந்தது என்று தெரிகிறது. பிறகு மந்திரபாகாரத்தை சொல்லுகிறது இந்நூல். ப்ராசாத மந்திரம், பஞ்சாக்ஷரமந்திரத்தின் முறையை நன்கு விரிவாகக் கூறுகிறார். பஞ்சாக்ஷரத்தின் ஆறு விதமும் கூறுகிறார். நான்கு வர்ணத்தாரும எவ்வாறு கூறவேண்டும் என்பதையும் எடுத்துக் கூறுகிறது இந்நூல். ஆகமநூலைப் பயிலும் முறையை நன்கு விரித்துக் கூறுகிறார்.

" வேதாந்தச்ரவணம் தத்ர த்ரிவர்ணானும் விதீயதே|
ஆகமார்த்தஸ்ய சிந்தாந்த: புராணம் சூத்ரவர்ணினும் "||

என்று கூறப்படுவதிலிருந்து வேதாந்த ச்ரவணம் செய்வதில் முதல் மூன்று வர்ணத்தார்களுக்கும், ஆகமார்த்தத்துடைய சிந்தாந்தத்தை நான்காம் வர்ணத்தவர்களுக்கும் விதிக்கப்பட்டுள்ளது.

மேலும், நான்கு வர்ணத்தவர்களுக்குள் குருவாக இருக்கும் தன்மை எந்த வர்ணத்திற்குத் தகுதி உடையது என்பதை விளக்குகிறார்.

" உத்மோ பிரமணன: ப்ரோக்தோ மத்யம: க்ஷத்ரியஸ்ததா|
அதமோ வைசிய இத்யுக்த: ஸர்வசாஸ்த்திரார்த்த வேதேபி:|
சூத்தரனா:| ச ததா ஸ்த்ரீனும் குருத்வம் ந கதாசன|| "

என்று சூத சம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் நான்காம வர்ணத்தவருக்கும், ஸ்திரீகளுக்கும் குருத்துவம் இல்லை என்பதாகும்.

மேலும், நான்கு ஆச்ரமிகளுக்கும் குருத்வம் உண்டு எனக் கூறுகிறது சூதசம்ஹிதை என்னும் நூல். இதில் அதிவர்ணாச்சிரமியாக இருப்பின் உயர்ந்தவன் எனத்தெரிகிறது. நான்கு ஆச்சரமிகளுள்ளும், எப்பொழுதும் ப்ரம்மசாரியாக இருக்கிறவர்களுக்குக் குருத்வம்

என்பது மிக மிகச் சாலப்பொருத்தம் என அசிந்தியவிச்வம் என்னும் நூல் கூறுகிறது.

இதிலிருந்து நைட்டிகனான ப்ரம்மசாரியும், சந்நியாசியும் குருவாக இருக்கும் தன்மை பெற்றவர்கள் என அறிய முடிகிறது. மேலும் சுப்ரபேத ஆகமத்தில்,

" ஆசார்ய லக்ஷணோபேத: சைவ சித்தாந்த வித்சுதீ:।
நைஷ்டிதக சிவயோகஞ்ய: ஸர்வேஷாந்து குருத்தம: ॥

என்ற செய்யுளில் இருந்து ஆசார்ய லக்ஷணத்தோடு கூடியவரும்; சைவசித்தாந்தங்களில் நல்லஞானம் உடையவரும் ஆனநைஷ்டிகன் குருவாக இருக்கும் தன்மை உடையவர் எனக் கூறப்பட்டுள்ளது.

இது மாதிரி பற்பல ஆகமங்களில் சான்றுகளால் குருத்துவம் ஆகும் தன்மையை இந்நூல் நன்கு விளக்கிக் கூறுகிறது. அதன் பிறகு ஆசார்ய மதத்திற்கு அர்த்தம் கூறப்படுகிறது.

" ஞானயோக கிரியா சார்யாஸ்ஸ்யக் ஆசரதே
யத: தஸ்மாது ஆசார்ய இத்யுக்த: ஸர்வ
சாஸ்த்ரார்த்த வேதிபி:। "

என்று ஆசார்ய மதத்திற்குப் பொருள் கூறப்படுகிறது. ஆச்ரம தர்மத்தில், தபஸ் முதலிய கிரியைகளில் ப்ராமணன் முதலியவர்களுக்கு நான்கு ஆச்ரமம் வகுக்கப்பட்டுள்ளது. க்ருதயுகம், திரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்னும் யுகங்களிலும் நான்கு வர்ணத்தார்க்கும் நான்கு ஆச்ரமங்களில் உள்ள தர்மத்தை இந்நூல் எடுத்துக் காட்டுகிறது. அதிலும் கலியுக தர்மத்தில்,

" சதுர்வர்ணேஷு ஸ ஸ்ரேஷ்ட: ஞானவான்
யோகவான் நர:।
யஸ்மின் ஞான ச யோகஸ்ச ஞானசாதனமேவ ச
சிவலிங்கார்ச்சனம் நித்யம் சிவபக்திஸ்தயைவ ।
த்ரிபுண்ட்ரதாரணம் சைவ பஸ்மோத்தூலன ததா,
ருத்ராக்ஷ தாரணம் சைவ சிவபக்த ப்ரபூஜனம்
தீக்ஷா விதான யோகம் ச துவர்ன்யேஸு ய ரேத்
சத்யாஸ விதிஞ யஸ்து த்வந்த்வ பூத விவர்ஜித:
ஏதானி லக்ஷணநி யஸ்மின் ஸ து ர்கூத்தம
சந்யாசினி வா து யோகி வா அதிவாணீஸ்ரமீ ததா
ஏகைகம் வாபி சைகஸ்மின்
ஸர்வம் வாஅபி தத்தி வ ச।"

இவ்வாருக எவரிடத்தில் ஞானமும், யோகமும் இருக்கிறதோ அவரே நான்கு வர்ணத்தவருள் உயர்ந்தவர் என்று கலியுகதர்ம

அத்யாயத்தில் கூறப்பட்டுள்ள விஷயத்தை இந்நூல் நன்கு எடுத்துக் காட்டுகிறது. நான்கு வர்ணத்தார்க்கும் நான்கு யுகங்களிலும் நான்கு ஆச்ரமம் உண்டு என்பதைச் சைவாகம நூலாகிற சுப்ரபேதத்தில் நன்கு விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

மேலும், நைஷ்டிகனுக்கு ஜாதி, பேதம் இல்லை என்பதை இந்நூல் நமக்குத் தெரியப்படுத்துகிறது. அதாவது

" நைஷ்டிகஸ்ய விசேஷேண ஜாதிபேதம் ந வித்யதெ "

என்று வாக்யத்தினால் கூறப்பட்டுள்ளது. மேலும் நான்காவது வர்ணத்தவர்களுக்கும் ஜடாதாரணம் விதிக்கப்பட்டுள்ளது. உபநயனம் செய்யக்கூடிய காலத்தையும், (மூன்று வர்ணத்தார்களுக்கும்) குறிப்பிடுகிறது. பிட்சை எடுக்கும் முறையை நன்கு விளக்குகிறது.

" பவதி பிக்ஷாம் தேஹி " என்று ப்ராம்மணரும்,

" பிக்ஷாம் பவதி தேஹி " என்று ராஜாக்களும்,

" பிக்ஷாம் தேஹி பவதி " என்று வைஸ்யனும் கூறத்தகுந்தது என்று சூதசம்ஹிதை கூறுவதை இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

மேலும் ப்ரம்மசாரியை, இருவிதமாகப் பிரிக்கப்பட்டுள்ளது, அதாவது நைஷ்டிகன் என்றும் பௌதிகன் என்றும் இருவகையாகக் கூறப்பட்டுள்ளது. இதைப்பற்றி இந்நூல் நன்கு விரிவாகக் கூறுகிறது.

மேலும் ஆதி சைவ குலத்தில் தோன்றியவர்களே ப்ரதிஷ்டை முதலிய க்ரியைகளில் சிறந்தவர் என்றும், ப்ராம்மணன் முதலிய நான்கு வர்ணத்தவர்களும் அவரவர்கள் தத்தம் காரியங்களில் தகுதி பெற்றவர்கள் என்றும் கூறியுள்ள காமிகாகம வசனத்தை இந்நூல் நன்கு விரிவாகக் கூறுகிறது.

" ஆதிசைவ குலெஜாத: ஸ்ரெஷ்டஸ்யாது ஸ்தாபநாதிஷு "

என்கிற வாக்கியத்தை நமக்குக் காமிகாகமம் உணர்த்துகிறது. இன்னும், வீர்தந்திம் என்னும் நூல்,

" தீக்ஷிதச்சாபி யோ விப்ர: ப்டுத்யாத்தப ந பூஜயெது ।
ஆத்மார்த்தப பூஜந குர்யாத் பரார்த்தம் நைவபூஜயெது "

என்ற வாக்கியத்தால் தீட்சை பெற்றவராக இருந்தாலும் ப்ராம்மணன் பரார்த்த பூஜை செய்யக்கூடாது என்றும் ஆத்மார்த்த பூஜை செய்யலாம் என்றும் கூறுகிறது.

இது போன்ற பற்பல விஷயங்களை – நித்யபூஜா, ப்ரதிஷ்டை, உத்ஸவம், ஆத்மார்த்த ப்ரஸித்தி விஷயங்களைப் பற்றி நன்கு விஸ்தாரமாக வர்ணச்சிரம சந்திரிகை கூறுகிறது.

மேலும் நான்காம் வர்ணத்தவர்க்கு, தீக்ஷையினால் அத்தன்மை விலகிவிடும் என்பதை இந்நூல் பல சான்றுகளுடன் எடுத்துக் காட்டுகிறது.

" வாகீசீ ஜநநீ யஸ்ய வயோமவ்யாபி பிதாசிவ:
மந்த்ரை: சிவாத்வரேஜாத ச: சூத்திராஸ்யாது கதப்த்விதி॥ "

என்ற வாக்கியத்தினால் தீக்ஷையால் மறுபிறப்பு அடைந்த பிறகு (அதாவது தாய் வாகிஸ்வரி, தந்தை சிவன்.) அந்த நான்காம் வர்ணத்தினருக்கு அத்தன்மை இல்லை எனக் கூறுகிறது. தீட்சையினால் நான்காம் வர்ணத்தவருக்கு ப்ராம்மணத்தன்மை வருகிறது என்பதை இந்நூல் நன்கு கூறுவதைக் காணலாம்.

பிறகு சந்யாச தர்மத்தைப் பற்றி நன்கு விளக்கமாகக் கூறுகிறது இந்நூல். மற்றும் சந்நியாசிகளுக்கு அந்தியேஷ்டி செய்யும் முறையை நன்கு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அக்னிகார்யம் இல்லாமல் செய்யவேண்டும் என்றும், அக்னிகார்யத்தோடு செய்தல் கூடாது என்றும், அவர்களுக்குச் சமாதி எழுப்பவேண்டும் என்று காமிகம் முதலிய ஆகமநூல் பிரமாணமாகக் கூறப்படுகிறது.

"தஹநம் ந குர்வீத யதீநாம் சாவடக்ரியா" என்ற சுப்ரபேத ஆகமநூலில் இருந்து நாம் அறிய முடிகிறது. இதைப்பற்றி நிரம்பவும் விரிவாகக் கூறப்படுகிறது.

பிறகு சமாதி லிங்கத்திற்கு எவ்வாறு ப்ரதிஷ்டை செய்யவேண்டும். உத்ஸவங்கள் எவ்வாறு செய்யவேண்டும். நித்ய பூஜைகள் எவ்வாறு செய்யவேண்டும், பௌஷ்கர ஆகம வசனப்படி இந்நூல் நன்கு தெளிவுபடக் கூறுவதைக் காணலாம். மேலும் குரு சிவன் இவர்களிடத்தில் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதையும் கூறுகிறது.

" சற்குருப நாவமந்யேத ரௌரவம் நரகம் வ்ரஜேது।
மந்த்ர ச அக்ஷர பாவேந சிலாரூபேண தைவதம்।
குருப் மாநுஷ பாவேநரௌரவம் நரகம் வ்ரஜேது।
மாத்ரு நிந்தா மஹாவ்யாதி: பித்ருநிந்தா। பிசாசதா।
தைவ நிந்தா தரித்திரஸ்யாது குருநிந்தா குலக்ஷயம்॥ "

என்ற வாக்கியத்தில் இருந்து ஒரு பொழுதும், குருநிந்தை செய்யக் கூடாது. அது மட்டும் அல்லாமல், மந்திரத்தை வெறும் எழுத்தாகவும், தெய்வத்தைச் சிலா (கல்) என்ற பாவத்தோடும் குருவை மனுஷ்யன் என்ற பாவத்தோடும் நினைக்கக் கூடாது என்றும் இந்நூலில் இருந்து நாம் அறியமுடிகிறது. எப்பொழுதும் குருவின் உத்திரவை நிறைவேற்ற வேண்டும். தெய்வத்தினிடத்திலும், குருவின் சந்நிதானத்திலும் பக்தியுடன் இருக்க வேண்டும் என்பதை இந்நூல் நமக்கு நன்கு உணர்த்துகிறது.

## வரணச்சிரம சந்திரிகையை அருளிய
## ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிகரின்
## வரலாற்று சுருக்கம்

திருஞானசம்பந்த தேசிகர்பால் அருளுபதேசம் பெற்றவர் ஸ்ரீலஸ்ரீ திருவம்பலதேசிகர். இவர்கள் அருட்செங்கோல் நடாத்தும் நாளில் மூவலூர் சுப்பராயச் செட்டியாரென்பார் காலஞ்சென்ற தம் தாயாருக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்து முடித்து இக்குருமூர்த்திகள்பால் வந்து வணங்கித் "தாயினை வீடு பெறுவித்தல் புதல்வரது கடனாதலின் அதற்குத் தேவரீர் அருள் பாலித்தல் வேண்டும்" என்று விண்ணப்பித்தார். குருமூர்த்திகள் ஞான நோக்கினால் அவ்வான்மா, செட்டியாரது மனைவியின் கருப்பத்திலிருப்பதையறிந்து, "உமக்கு மகவு வேண்டுமோ? தாய் வீடு பெறுதல் வேண்டுமோ?" என்று வினவ, செட்டியார் "அடியேன் முதலில் வேண்டுவது தாய் வீடு பெறுதலே" என்று தெரிவித்தனர். குருமூர்த்திகளும் "அவ்வாறே செய்வோம்" எனத் திருவுளம்பற்றித், திருமஞ்சனம் முடித்துக்கொண்டு ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்து அவ்வான்மாவைக் கொணர்ந்து தீக்ஷை செய்து வீடுபேறடைவித்தருளினர்.

தஞ்சை யரசன் கடலாட விரும்பிச் சேனைகள் சூழ, காவிரிப்பூம் பட்டினம் நோக்கிச் சென்றான். செல்பவன் தருமபுரம் அணுகினான். ஞானபுரீஸ்வரர் ஆலயத்தில் அர்த்தயாம பூஜை நடந்தது. மணியோசை காதிற்பட்டது. ஊர்தி விட்டிறங்கி மனத்தினால் வணங்கிப் பின்னர் ஊர்தியிலேறிச் செல்லலாயினன். அப்போது உடனிருந்த சிலர் "சூத்திர சமாதியைத் தாங்கள் வணங்கியதால் பாவத்திற்குள்ளானீர்கள். ஆதலால் பிராயச்சித்தம் செய்துகோடல் வேண்டும். அதுவுமன்றி, மற்றையோரும் இக்குற்றத்திற்கு ஆளாகாதவாறு இவ்வாலயத்தை இடித்துவிடுதலே நலம்" எனக் கூறினர். அரசனுக்கு ஞானதேசிகரின் திருவருள் பெறுங் காலம்

சமீபித்தபடியால் ஏவலாளரைக் கூவி ஆலயத்தை இடிக்கத் தொடங்கினர்கள். அதுகண்ட அடியார்குழாங்கள் விரைந்து ஓடிக் குருமூர்த்திகளிடம் தெரிவிக்க, குருமூர்த்திகள்,

" ஈசன் பலகீன னென்றக்கா லாலயத்தின்
மோசம் வந்த தென்று மொழியலாம் — ஈசனே
ஆக்குவது மாக்கி யழிப்பதுவுந் தானனல்
நோக்குவதென் யாம்பிறரை நொந்து "

என்று அடியார்களுக்கு ஆறுதல் கூறியருளினர். எம்பெருமானும் தமது கூத்தொலியினைக் கேட்பித்துத் திருவருள் பாலித்தனர்.

அவ்வொலியினைக்கேட்ட குருமூர்த்திகள் இறைவன்திருவருளை வியந்து சந்நிதானத்தில் நின்று,

" தேசஞ் சிவாலயங்கள் சேர அலையவொரு
மோசம் வந்த தையோ முதல்வனே — தேசத்து
மன்னைவெறுப் பேனே வருவினையை ஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனே வுரை "

என விண்ணப்பித்துப் பஞ்சாக்கரத்தைச் செபிக்க, இருப்புக் கோல்படு மிடந்தோறும் உதிரம் பெருக, அரசின் ஏவலாளர்கள் மூர்ச்சையுற்று வீழ்ந்தனர். நகரெல்லையைக் கடந்து சென்ற அரசனுக்கோ கண்ணொளி மழுங்கிற்று. ஆலயத்தை இடித்தோரும் ஊமையராய்த் திகைத்து நின்றூர்கள். அரசன் தனது குற்றத்தை யுணர்ந்து மீண்டும் தருமபுரமடைந்து தன் ஏவலாளர்களின் நிலைமையைத் தெரிந்துகொண்டு மடாலயத்தினுட்சென்று குருமூர்த்திகளின் திருவடிகளில் விழுந்து, 'பிழை பொறுத்தருள வேண்டும்' எனப் பிரார்த்தித்தான்.

குருமூர்த்திகளும் இறைவன் அருள்புரிவான் எனத் திருவுளம் பற்றி அரசனுடன் ஆலயத்திற்கு எழுந்தருளினூர்கள். ஆலயத்தை யடைந்த அரசன் "இறைவனைத் தரிசித்தற்குக் கண்ணொளி இல்லையே; எவ்வாறு காண்பேன்" என்று வருந்த குருஞான சம்பந்தர் அருளால் ஒருகண் விளக்கமுற்றது. ஏவலாளர்கள் கீழே வீழ்ந்து கிடப்பதையும், கோல்பட்ட இடங்களில் உதிரம்பெருகுவதையும் கண்டு குருமூர்த்திகளைப் பிரார்த்திக்க, குருமூர்த்திகள் திருநீற்றினைத் தெறித்தார்கள். உடனே உதிரம் பெருகுதலும் நின்றது. ஏவலாளர்களும் எழுந்து ஞானமூர்த்திகளை வணங்கி நின்றூர்கள்.

பின்னர், அரசன் காவிரிப்பூம்பட்டினம் சென்று கடலாடித் தருமபுரத்தின் தென்கீழ்த் திசையில் கூடாரம் அமைத்துத் தன் பரிவாரங்களுடன் தங்கி, சுவாமி தரிசனம் செய்துவருங்கால் ஒரு நாள் குருமூர்த்திகளிடம் "'சூத்திரர்களுக்குச் சந்நியாசம் பெற அதிகாரமில்லை' என்று சிலர் கூறி அடியேனை மயக்கிவிட்டார்கள்; அதன் உண்மையைத் தெரிவித்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டனன். குருமூர்த்திகள் பலபிரமாணங்களால் அவன் ஐயத்தை நீக்கி, வருணாச்சிரம சந்திரிகை என்றதோர் நூலும் இயற்றியருளினார்கள். சந்நியாசத்தில் அதிகாரமில்லை என்று கூறியவர்களும் வெட்கித் தலைகுனிந்தனர். அரசன் ஒரு மண்டலம் சுவாமி தரிசனம் செய்து முடித்தவுடன் குருவருளால் அவனது மற்றொரு கண்ணும் விளக்கமுற்றது. ஊமையாயிருந்தும் ஊமை நீங்கப் பெற்றார்கள். அதனால் அளவிலா உவகை கொண்ட அரசன் தான் முதலில் தரிசித்தது அர்த்தயாம பூசையாதலால் அதுசிறப்புற நடைபெறுதற்கு வேண்டிய சிலநிலங்களை அளித்து விடைபெற்றுச் சென்றனன்.

அவ்வரசனின் மந்திரியாகிய கோவிந்த தீக்ஷிதர் என்பார் இவ்வற்புதங்களைக் கேள்வியுற்றுத் தருமபுரம் வந்து குருமூர்த்திகளைக் கண்டு வணங்கி, திருச்சத்திமுற்றத் திருக்கோயில் திருப்பணி செய்யுங்காலத்து அங்கு ஓர் மடம் அமைத்துக் குருமூர்த்திகளை எழுந்தருளியிருக்கச் செய்துப், திருவையாற்றில் புஷ்ய மண்டபமாதி திருப்பணி செய்யுங்காலத்து திருவையாற்றில் எழுந்தருளித், தொண்டுபல செய்து சிலநாள் உடனிருந்துபின்னர் விடைபெற்றுச் சென்றார். அப்போது திருக்கூட்டத்தடியார்களுள் ஒருவரைக் கொண்டு திருவையாற்றுப் புராணம் இயற்றுவிக்கப்பட்டது.

இக்குருமூர்த்திகள் சிலநாள் சிவஞானபானுவாய் விளங்கியிருந்து தம் அடியார்களுள் ஒருவருக்கு ஞானபிஷேகம் செய்து அழகியதிருச்சிற்றம்பலதேசிகர் எனத் திருநாமஞ்சூட்டி, பட்டத்தில் இருக்கச்செய்து முத்திநிலை எய்தினர்.



## பண்டார சாத்திரங்கள் :

# சித்தாந்த நிச்சயம்

பேராசிரியர், முனைவர். திரு. கு. சுந்தரமூர்த்தி

பண்டைக் காலத்திருந்தே தமிழர்தம் வாழ்வியலில் ஒழுக்க நெறிகளும், அவற்றின் பயனாக அடையத்தக்க ஆன்மீகநெறிகளும் தழைத்துச் செழித்து இருந்தன. இவ்வுண்மை தொல்காப்பியம், திருக்குறள் முதலிய பண்டைப்பனுவல்களானும், அகழ்வாராய்வுகளானும் நன்கு புலனாகின்றன. இவ்விரு நெறிகளும் காலப் போக்கில் மேன்மேலும் வளர்ந்திருந்தமையை அவ்வக்கால இலக்கியங்களால் அறிய முடிகின்றது. உயிரினங்களுள் உயர்ந்துநிற்கும் மனிதஇனம் இவ்விருநெறிகளையும் வகுத்தமைத்துக் கொண்டு வாழ்ந்தமைக்குக்காரணம் அம்மனித இனத்தின் மாட்டு உயர்ந்து வளர்ந்திருந்த சிந்தனைத் தெளிவேயாகும். தாம்யார்? தமக்குத் தலைமையாக விளங்குவது எது? அதனை அடைதற்கு மேற்கொள்ளத்தக்க நெறிமுறைகள் யாவை? அந்நெறி முறைகளைக் கொண்டொழுகுங்கால், எதிர்ப்படும் தடைகள் எவை? அவை ஏற்படக் காரணம்என்ன? அவற்றைக் களைதற்குரிய வழிவகைகள் யாவை? என்றெல்லாம்எண்ணி, அதன்முடிவாகக் கண்டபொருள் மூன்றும். அவையே இறை, உயிர், தளை என்பனவாம். இம்முப்பொருட்குரிய இயைபும் எழுச்சியும், விளைவும் இனைய என்பதை வகுத்துக்கூறும் முகமாக எழுந்த சிந்தனைகள் தத்துவச் சிந்தனை எனப்படும். சிவபரம் பொருளே முதல் எனக் கண்ட இனம் இவ்வகையில் எண்ணி முதிர்ந்து வளர்வதாயிற்று. இச்சிந்தனைக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டிலங்குவது சைவசித்தாந்தமாகும். இச்சிந்தனை பண்டைக்காலம் முதலே எண்ணப்பெற்று வளர்ந்து வந்திருப்பினும் அவற்றைத் தொகுத்தும் தனித்தும் எண்ணிய காலஎல்லை கி. பி. 12 முதல் 14 வரையாகும். இக்கால எல்லையில் எழுந்த நூல்கள் ஞானாமிர்தமும், மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்குமாகும்.

## திருநாவுக்கரசுதேசிக சுவாமிகள் :

இவ்வாறு வளர்ந்து முதிர்ந்த அரிய சிந்தனையை மக்கள் மனத்தில் வித்திட்டு வளர்க்க எழுந்த நிறுவனங்களே திருமடங்

களாகும். இத்தகைய திருமடங்களில் திருக்கயிலாய பரம்பரை வழியில் வந்த தருமை ஆதீனத் திருமடம் குறிப்பிடத்தக்கதாகும். இத்திருமடத்தின் ஒன்பதாவது குருமூர்த்திகளாக விளங்கியருளியவர்கள் திருப்பெருந்திரு திருநாவுக்கரசுதேசிக சுவாமிகள் அவர்கள் ஆவர்

## அருட்சிறப்பும் அருளிய நூலும் :

கி. பி. 1700 முதல் 1715 வரை வாழ்ந்தருளிய இக் குருமூர்த்திகள் ஒன்றிரண்டும் அறச் சிவானந்த வாரியுள் தோய்ந் தருளியவர்கள். ஒருகால் இவர்கள் புள்ளிருக்கு வேளூர் செல்வமுத்துக்குமாரசுவாமியை வழிபட எழுந்தருளிய பொழுது அப்பெருமான் தம்முன் இருந்த திரை விலகக் காட்சி கொடுத் தருளினர். 'மாயைத் திரை இறந்தால் காண்கின்ற தேவு' என்பது இதனாலும் புலனாகின்றது திருமாலே பரம்பொருள் எனத்தம்முன் வாதிட்ட வைணவன் ஒருவன் ஊமையாயினன். பின் தன் தவறு ணர்ந்து இக்குருமூர்த்திகளிடம் வேண்ட, ஊமை நீங்கப் பெற்றனன். தம்முள் பகைத்துப் போர் செய்த அஃறிணைப் பொருள்களும் பகை நீங்கி இயைந்து வாழ அருள் பாலித்த பெருமை யுடையவர்கள் இவர்கள்.

" கான மருங் கிள்ளையொரு குயில்செம் போத்துக்
கட்டரவம் பூனை எலி கதியிற் சேர
ஞான அருட் பார்வைபுரி நாதா போதா
நாடறியேற் குனதருளே நயப்ப தென்னுள்
வான மருங் கடம்பவனச் சவுந்த ரேசன்
மலரடியை யலரடியால் வணங்க வெண்ணித்
தானமரும் பூசைபுரி திருநாவுக் கரச
சம்பந்த ஞானகுரு தருமை வாழ்வே "

எனும் பாடல் இவ்வுண்மையை விளக்கும். இத்தகைய அருள்நலம் பழுநிய குருமூர்த்திகள் தம் முதிர்ந்த அனுபவப் பயனாக வழங்கி யருளியது சித்தாந்த நிச்சயம் எனும் நூலாகும்.

## சித்தாந்த நிச்சயம் : அமைப்பும் அழகும் :

சைவ ஆகமங்களில் கூறப்பட்டிருக்கும் பொருள்திறனே முடிந்த முடிபு என இந்நூல் கூறலின் சித்தாந்த நிச்சயம் எனப் பெயர் பெறுவதாயிற்று. இப்பெயர் குருமூர்த்திகளாலேயே இடப்பெற்றதாகும். இதனைச்

" சித்தாந்தம் யாதென்று சிந்திப்பவர்தமக்குத்
சித்தாந்த நிச்சயத்தைச்செப்பவே — முத்தனும்
ஐம்முகத்தான் தந்த அருட்கதிரோன்போல் விளங்கும்
கைம்முகத்தா னேமிகவும் காப்பு "

எனவரும் காப்புச் செய்யுளால் அறியலாம். இந்நூல் 101 பாடல்களையுடையது. ஆசிரியவிருத்தத்தாலாயது. செய்யுட்கள் பலவும் ஆற்றொழுக்கான நடையமைப்பையுடையது. உவமை நலஞ் சான்றது. எனினும் ஏகான்மவாதம், சிவசமவாதம், ஈசுவர அவிகாரவாதம், பரிணமவாதம், சிவாத்துவிதம் ஆகிய கோட்பாடுகளை மறுத்துச் சுத்தாத்துவித சைவசித்தாந்தப் பெருநெறியினை விளக்கும் முகமாக இந்நூல் அமைந்திருத்தலின், அவ்வக்கோட்பாடுகளையும் முற்ற உணர்ந்தார்க்கன்றி விளங்குதற்கு அரிதாக அமைந்துள்ளது.

## நுவலும் பொருள் :

ஆணவம் உயிரைத் தகைத்து நிற்கும் என்றும், அவ்வாறு தகைத்து நிற்பினும் அது தன்னைக் காட்டாது என்றும், உயிர் தனிநிலை (கேவலம்), கட்டு நிலை (சகலம்), விட்டுநிலை (சுத்தம்) ஆகிய மூவகை நிலைகளையும் பெறும் என்றும், மாயையின் விளைவாய உடல், உலகு, கருவிகளெல்லாம் உயிர்க்கு விளக்கம் தருவதன்றி மறைத்தற்குரியன அல்ல என்றும், ஆணவமலம் நீங்க இறைவனின் அருட்சத்தி பதியுமென்றும், அவ்வாறு பதிந்த நிலையில் உயிர் இறையடி அடைந்து இன்புற்றிருக்கும் என்றும் ஏதுக்களாலும், எடுத்த மொழியாலும் இந்நூல் விளக்கி நிற்கின்றது. சைவசித்தாந்தத்துள் கூறப்படும் இறை, உயிர், தளை என்பன என்றும் தோற்றமில் காலத்தன என்பதும், உள்பொருளில் இருந்தே பிறிதொரு பொருள் தோன்றும் (சற்காரியாவாதம்) என்பதும் இச்சமயத்தார்க்கு அமைந்த அடித்தளமாய கொள்கைகளாகும்.

" சைவத்தில் எல்லாப் பொருளும் அநாதித் தகைமையென்று
மெய்வைத்த ஆகமம் சற்காரியத்தை விளம்புவதும் "

எனவரும் பாடலால் இவ்வுண்மை விளக்கப்படுகிறது. இப்பேருண்மையையும், சிவசமவாதம் முதலிய பிறசமயக் கோட்பாடுகளையும் விளக்கும் முகமாகக் குருஞானசம்பந்தர் கூறும் செய்திகள் பலவேனும் சில சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாம்.

**ஆசிரியர் :**

இந்நூலையருளியவர் தருமை ஆதீனத்து ஒன்பதாவது குருமூர்த்திகளாக விளங்கிய திருநாவுக்கரசு தேசிக சுவாமிகள் என முன்னரும் கூறப்பட்டது. இதனை,

"ஒருமை தருஞ்சிவ ஞானந்த முத்திய தொன்றொழியப்
பெருமைசெய் முத்தி பிரானுக் கிணையென்னும்பித்தர் [சொன்னித்து
அருமை யுடையசித் தாந்தமீ தென்ன வருளுருவாந்
தருமையில் நாவுக் கரசசம் பந்தனும் சாற்றினனே" (5)

என்னும் பாடல் அகச்சான்றாய் நின்று விளக்குகின்றது.

**ஆசிரியரின் குருமூர்த்திகள் :**

இக்குருமூர்த்திகளுக்கு ஞானாசிரியராக விளங்கியருளியவர்கள் தருமை ஆதீனம் எட்டாவது குருமகாசந்நிதானம் அழகிய சிற்றம்பலதேசிக சுவாமிகள் அவர்கள் ஆவர். இதனை,

"ஒருமைய தாகுஞ் சிவானந்த முத்தி யினையொழியப்
பெருமைசெய் முத்தி பிரானுக் கிணை யெனப் பேசுவது
பருமை யொழியும் இன் சித்தாந்தம் ஈதெனப்பாரில்வந்து
தருமை யழகிய சிற்றம் பலகுரு சாற்றினனே." (5A)

என இந்நூற்கண் வரும் பாடல் விளக்குகின்றது.

**மெய்கண்டார் :**

புறச்சந்தான குரவரில் முதற்குரவாக விளங்கியருளியவர் இவர். இவர்தம் கருத்தே வலிவுந் தெளிவும் உடையதென ஆசிரியர் போற்றி மகிழ்வதை,

"நல்லார்கள் போற்றிய மெய்கண்ட நாதன் நயந்தளித்த
சொல்லார் கமப்பொருள் தன்னைவிட்டு அன்னியம் சொல்லும் [இந்தக்
கல்லார் மருட்சொற் கழித்துச்சித் தாந்தக் கருத்திதெனப்
பொல்லாத பிள்ளை வினையடி போற்றிப் புகலுதுமே"

"மெய்கண்ட தேவனருளாற் சிவாகம மெய்ப்பொருள்தேர்ந்து
ஐயமில் மெய்யடி யாருக் களித்ததை யாய்ந்தவர்போற்
பையவுள் வந்து பொருண்மாறு பாடு பகர்ந்தவர்க்கே
செய்ய பொருளவன் செப்பிய வாறிவண் செப்புதுமே"

எனவரும் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

**சிவசமவாதி :**

வீடுபேற்று நிலையில் உயிர் இறைவனோடு ஒப்பாகும் என்பது இவர் கருத்தாகும். இக்கருத்தைக் குருமூர்த்திகள் மிக வன்மை யாக மறுக்கின்றார்.

"முத்தி சிவனுக்கு இணையன்று". (3)

எனும் பகுதி இதனைத் தெளிவுறுத்தும். இவ்வாறு ஓதுவோர்க்குப் போகமன்றிப் பரமுத்தி என்பதில்லை என மேலும் கூறுவாராக,

"ஆகம வேத புராணுதி யாய்ந்த வருளுடையோர்
ஏகன தானந்த மேமுத்தி யென்ன விசைத்ததனை
யூக மிலாது சிவசம முத்தியென் றோதினர்க்குப்
போக மலாது பரமுத்தி தானும் பொருந்தலின்றே". (4)

எனச்சற்றுவன்மையாகவும்கூறிமறுக்கின்றார். அன்றியும்இவ்வாறு கூறுவார் பித்தர் என மேலும் கூறுவர்.

"ஒருமை தருஞ்சிவ னுனந்த முத்திய தொன்றெழியப்
பெருமைசெய்முத்தி பிரானுக் கிணையென்னும்பித்தர்சொல்"

எனும் பகுதி இதனை விளக்கும்.

**அணைந்தோர் தன்மை:**

திருவருள் வலத்தால் உயர்ந்து இறைவனின் திருவடியையே உளத்தால் அணைந்து நிற்கும் அருளாளர்கள் தம்மளவில் என்றும் துன்புறுவதில்லை. ஒரோவழித்துய்க்க விருக்கும் ஊழின்எச்சத்தால் துன்பம்வரினும் அதனைத் துன்பமாகக் கொள்ளார். எனினும் பிற உயிர்கள் படும் துன்பங்களைக் கண்டு தாம் துன்புறுவதில் இவர்க்கு இணையில்லை. இத்துன்பம் அவர்களுக்கு என்ஞான்றும் உண்டு. இதனைக்,

"கள்ளத் தலைவர் துயர் கருதித்தம் கருணை
வெள்ளத்து அலைவர் மிக".

எனவரும் திருவருட்பயனும் நன்கு விளக்கும். நம் குருமூர்த்திகள் இதனை உளங்கொண்டு கூறும் பாடல் எண்ணற்குரியதாம்.

"மன்னவ னுலும் வியாதியி னுலும் மறம்புரியத்
துன்னு மனிதர் மிருகாதி யாலுந் தொகுநிரயத்
தின்னிலி னுலு மிளைக்கு முயிர்கண் டிரங்குமுத்தர்க்
குன்னிய துன்பம்விட் டின்பமெக் காலு முறுவதின்றே." (71)

என்பது அவர் தம் திருவாக்காகும்.

## வீடுபேற்றுநிலை :

உயிர் வீடுபேறடைந்தக்கால் எந்நிலையில் இருக்கு மென்பதில் பலரும் கருத்து வேறுபடுவர். அவர்களில் ஒருவர் வீடுபேற்று நிலையில் உயிர் எவ்வித இன்பதுன்பமும் இன்றிக் கல்லெனக் கிடக்கும் என்பர். இவரைப் பாடாணவாதிகள் என்றழைப்பர். இவ்வாறு இன்பதுன்பம் இன்றிக் கல்லெனக்கிடத்தற்கோ உயிர் இத்துணை முயற்சி செய்யவேண்டும்? பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சிப்பதெல்லாம் அவன் அருள் பெறவும் அதன் வழிப் பேரின்பப் பெருவாழ்வை அடைவதுமே அன்றோ? இதனை நம் குருமூர்த்திகள்,

"முத்தியி லின்பமுண் டென்றே மொழிந்தனர் மூதறிவோர்
சித்தி யடைந்த வியோகரு மின்பஞ் செறிந்தனரால்
நித்திய மாகிய வின்பமின் றென்ன நிகழ்த்துவதென்
இத்தன்மை கேவல மெய்தினர் தங்க ளியல்பதுவே." (78)

எனவரும் பாடலால் குறித்தருளுவர்.

## அறவுரை :

தத்துவ நூல்களில் உலகினருக்கு அறங்கூறும் பாங்கு அமைதலும் உண்டு. நம் குருமூர்த்திகளும் அவ்வாறு ஓரிடத்துக் கூறியுள்ளார்.

"பெற்றேன் றுயர்த்தான் பிறவிப் பெருந்துயர் பிற்பட்டிட
முற்றும் பரபோகந் துயப்பித் திடுதலை முன்னுகவே." (81)

என்பது அவ்வறவுரையாகும். சிவஞானசித்தியாரில்,

"உள்ளபோதே பார்உய்ய," "ஒருகால் வணக்குறீர்
அரனை என்றும் வானவர் வணங்க வைப்பான்"

எனவரும் அறவுரைப் பகுதிகளை இக்கூற்று நினைவு படுத்துகின்றது. இவ்வாறு மெய்ப்பொருள் கூறும் ஆசிரியர்கள் இடையே ஆற்றுப் படுதற்குரிய அறவுரைகூறுவது நம்மீது வைத்த கருணையினாலாகும்.

## ஞானாமிர்தம் :

இந்நூல் வாகீசமுனிவரால் இயற்றப் பெற்றது. மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கிற்கும்முந்தியது. இந்நூலைக் குருமூர்த்திகள் இருபாடல்களில் குறித்தருளுகின்றார்.

"மன்னும் பிரவஞ்ச போக முயிருக்கு மற்றரற்கின்
றென்ன மொழிந்திடும் ஞானு வமிர்த மிசைந்திடவே
சொன்ன நற்காரியங் காசினி யென்பதுஞ் சொற்றிலரோ
பன்னிய தோட மதனுற் பகர்ந்தது பண்பினையே."

"ஊனுர் பிரபஞ்ச போக மரற்கின் றுயிர்க்குண்டெனு
ஆனுத காரியங் காசினி யென்னு மகவறன்னே
ஞானு வமிர்தத்துச் சொல்லி யிருப்பது நாடிலேயோ
மானுர் கரனுக்குத் தோடமுண் டென்பது வார்த்தையின்றே

என்பது அப்பாடல்களாகும். (இவ்விரு பாடல்களிலும் அமைந் துள்ள பொருண்மை ஒன்றுகவே உள்ளது. இவை தஞ்சை சரஸ்வதி மகால் பதிப்பில் உள்ளவை.)

சிவஞானசித்தியார் :

இக்குருமூர்த்திகள் இந்நூலைத் தம்மேல் எல்லையாகக் கொண்டு போற்றுகின்றுர். அணைந்தோர் இருள்மலம் நீங்க அரனடிக்கீழ் இருப்பர் என்றும், உலகியற் பொருள்களைத் தம் அகத்தானும் எண்ணுர் என்றும் சிவஞானசித்தியார் கூறுகின்றது. இவர் இறைவன் வழங்கும் சிவஞானத்தை மாந்தித் திளைத்திருப்பர் என்றும் இந்நூல் கூறுகிறது.

"பரஞானத் தாற்பரத்தைத் தெரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞான
மாதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்."

எனச் சிவஞானசித்தியார் கூறும். இப்பாடற் பொருண்மை யினையும், பாடல் தொடர்களையும் பொன்னேபோல் போற்றிய குருமூர்த்திகள் இருபாடல்களில் அவ்வருமையை எடுத்துப் பாராட்டுகின்றுர்.

"ஆறும்பரம்பார்த் திருப்பர் பதார்த்தம்பா ரார்களென்றும்
கீறு விருண்மல நீங்க வரனடிக் கீழிருப்பார்
மாறுச் சிவானு பவமாவி யென்றும் வயிந்தவமோ
தேறுக் கலக்கமென் றுஞ்சித்தி நூலிடைத் தேர்ந்தனமே."

"சொன்னநற் சித்தியி னுண்மையை நீயுந் துணிந்தறிய
முன்னவ னனந்தந் தன்னமு தார முயன்றருந்திப்
பின்ன மிலாம விருப்பரென் றுகமம் பேசியதால்
அன்னியம் விட்டுச் சிவாநந்த முத்தியென் றேயறைவே."

என்பன அப்பாடல்களாம்.

## பதிப்புக்கள் :

இந்நூல் தருமை ஆதீனத்தில் இருந்த படியோடு சீகாழி. ச. சதாசிவ முதலியாரின் படியோடும் ஒத்துப்பார்த்துச் சீகாழி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையால் 1928 இல் முதன் முதல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதனை அடுத்துச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 1934இல் பதிப்பித்துள்ளனர். இதன்பின் தஞ்சை சரஸ்வதி மகால் நூல்நிலைய வெளியீடாக 1968இல் வெளி வந்துள்ளது. இன்று காணத்தகும் இம்மூன்று பதிப்புக்களிலும் பல்வேறு பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன. பாடல் எண்ணிக் கையும் வேறுபட உள்ளன.

## பாடல் எண்ணிக்கை :

முத்துத்தாண்டவராயபிள்ளைபதிப்பில் 98பாடல்கள் உள்ளன. கழகப்பதிப்பில் 101பாடல்கள் உள்ளன. சரஸ்வதி மகால் பதிப்பில் 129 பாடல்கள் உள்ளன. கழகப்பதிப்பில் இந்நூலை இயற்றியவர் சிவாநந்த தேசிகர் என உள்ளது. இவர் குடவாயில் சிவப்பிரகாச தேசிகரின் மாணவர் என்றும், 18ஆம் நூற்றாண்டினர் என்றும், சைவ சித்தாந்தசாரம் எனும் நூலையும் இவர் இயற்றியுள்ளார் என்றும் அப்பதிப்பில் குறிக்கப்பெற்றுள்ளது. அவ்வாறு குறிக்கும் அப்பதிப்பில் முத்துத்தாண்டவராயபிள்ளையின் ஏட்டுச் சுவடிகளி லிருந்து படி எடுக்கப் பெற்றது என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. எனினும் சிவானந்த தேசிகரால் இயற்றப்பெற்றது என்றதற்கு எவ்விதக் காட்டும் அப்பதிப்பில் இல்லை. எனவே, இக்கூற்றுப் பொருத்தம் உடையதன்று. கழகப் பதிப்பில் கடவுள் வணக்கப் பாடலாகப் பொல்லாப்பிள்ளையார் வணக்கம் அமைந்துள்ளது. இப்பாடல் ஏனைய இருபதிப்புக்களிலும் இல்லை. சித்தாந்தம்

யாதென்று எனத் தொடங்கும் பாடல் கழகப் பதிப்பிலின்றி ஏனைய பதிப்புக்களில் உள்ளன. கழகப் பதிப்பில் 11, 12, 57, 58, 60 61, 62, 70, 77, 78, 79, 80, 81, 82, 98, 99, 100, 101 ஆகிய பாடல்கள் சிதைந்து காணப்படுகின்றன. முத்துத்தாண்டவராய பிள்ளை பதிப்பில் பாடல்கள் பெரிதும் சிதைவின்றி உள்ளன. தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையப் பதிப்பில் 49, 52, 100, 115 ஆகிய எண்ணுள்ள பாடல்கள்சிதைந்துள்ளன. இவ்வாற்றான் இப்பதிப்புக் களில் ஒருமை காண இயலாத நிலையில் பொருள் தெளிவும், பொருள் தொடர்பும் புலனாகாது உள்ளன. சரஸ்வதி மகால் நூல் நிலையப் பதிப்பில் இந்நூற்கு அமைந்த உரை என ஒன்றும் காணப்படுகிறது. ஆயினும் அதனை இயற்றியோர் பெயர் யாதும் காணப் பட்டிலது. உரையும் இந்நூற்பொருளுக் கியைந்த மேற் கோள்களுடன் விளங்குவதன்றி வேறு விளக்கம் பெற்றிலது. எனினும் இவ்வுரையாசிரியர் சிறந்த புலமை உடையார் என்பதை அம்மேற்கோள் பகுதி காட்டுகின்றது.

## நிறைவுரை :

இவ்வாறு நம் குருமூர்த்திகள் தாம் திருவருளில் அழுந்தி அறிந்த அனுபவத்தால் கூறப்பெற்றிருக்கும் செய்திகள் பலவாம். அவற்றை அறிதற்கு இவ்வறிமுகம் தூண்டுகோலாகும்.



ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகரின்
திருவருட்பாத் திரட்டுச் சிந்தனை :

# கணபதியெனும் குணமேரு

வித்துவான் திருமதி. ப. நீலா, எம். ஏ., எம். ஃபில்.,

## ஆசிரியர் குறிப்பு :

அரன் நாமமே வையகமெங்கும் சூழவேண்டும். துயர்கள் நீங்கவேண்டுமென்ற தளரா விருப்புடைய தருமபுர ஆதீன சைவத் திருமடத்தின் கொலுபீடத்தைப் பத்தாமவராக வந்து அலங்கரித்தவர்கள் ஸ்ரீலஸ்ரீ சிவஞான சுவாமிகள். இவர்கள் ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஏற்றிய தீபத்தைக் குன்றினுச்சிக்குக் கொண்டு சென்று விளங்க வைத்த முயற்சியாளர்.

வான்பொய்ப்பினும் தான்பொய்யா மலைத்தலைய கடற் காவிரி தவழ்ந்து வரும் தருமையில் ஞானச் செங்கோலோச்சி வரும் நாளில், தலயாத்திரை செய்யத் திருவுள்ளம் பற்றினார்கள். யாத்திரையைப் புள்ளிருக்கு வேளூரிலிருந்து தொடங்கியதால் ஸ்ரீ செல்வமுத்துக்குமரனுக்கு ஒரு செந்தமிழ்ப் பாமாலை கிடைத்தது. சீகாழியின் சட்டைநாதப்பெருமானையும் பாடிப் பணிந்தார். பின் தில்லையில் சிதம்பர நடேசர் பற்றிப் பாடி மகிழ்ந்தார். அதன்பிறகு தம் குருவிற்கும் குருவாக இருந்தவர் வாழ்ந்த தலமான திருவாரூர் வந்து - பெருமானின் அசபா நடனத்தைப் போற்றிப் பாடியதோடு சித்தீச்சரம் ஸ்ரீ தட்சிணாமூர்த்தியின் மேலும் திருவருட்பாப் பாடிப்பரவினார்.

சிலநாட்களுக்குப் பின் தென்னக யாத்திரை செய்யத் திட்டமிட்டு மதுரை வந்தார்.† தமது வழிபடு தெய்வமும் ஆன்ம நாயகருமான 'சொக்கநாதன்' - கண்ணுக்கினிய பொருளாய் - தம் குருநாதர் கரத்தில் வந்த எளிமையை நினைந்தார். ஆராக் காதலால் பொங்கி வந்த உணர்வை - தமிழ்த் தொடையலாக்கிப் பெருமானுக்குச் சார்த்தி அஞ்சலி செய்தார்.

---

† ஸ்ரீ சொக்கநாதசுாமி திருவருட்பா எழுந்த சமயம் இதுவாகவே அமையும்.

மதுரையில் இருந்தநாளில் தொழுநோயாளி ஒருவனின் நோய் நீங்கக் கடைக்கண்ணுல் அருள்செய்து - காளையார் கோயிலில் உள்ள தீர்த்தத்தில் மூழ்கி வர ஆணையிட்டார். அப்படியே செய்து அவன் நோய் நீக்கம் பெற்றுன். பின்னர்த் திருச்செந்தூர் செல்லத் திருவுளங்கொண்டு புறப்பட்டு - அவ்வூரை நெருங்கும் நேரத்தில் - அவ்வூர்ப் போற்றிமார்கள் இவரது சிவிகையைத் தடுத்தனர். பகலில் தீவர்த்தியுடன் பல்லக்கில் செல்லக்கூடாது. என விவாதிக்கும் நேரத்தில் செந்திலாண்டவனே அர்ச்சகரின் வடிவில் வந்து சுவாமிகளின் பெருமையைக்கூறிப் போற்றிமார்களை வாயடைக்கவும் செய்தான். வழிபாடு முடித்துத் திரும்பி வந்த சுவாமிகளைப் பின்னே போற்றிமார்கள் வணங்கித் திருநீறு பெற்று வாய்பேசும் திறம் பெற்றனர். மலைநாட்டரசன் துங்கன் தன்மகளைப் பற்றியிருந்த பிரும்மராக்கத நோயை, சுவாமிகளின் பெருமை கேட்டறிந்து வந்து வணங்கிப் போக்கிக் கொண்டான்; தனது நன்றியறிதலைக் காட்டும் வகையில் நிலங்கள் பலவற்றை இறையிலியாகத் தந்தான் இவ்வாதீனத்திற்கு.

வெற்றிகரமாக யாத்திரையை முடித்துத் தருமைவந்த பின் ஒருநாள் பிருமராக்கத மொன்று வந்து சுவாமிகள் திருவடிகளில் விழ - இது துங்கன் மகளைப் பற்றியிருந்த பிருமராக்கதமே யென்றுணர்ந்து, அதன் விண்ணப்பம் என்ன என்பதைக் கேட்டார்கள். தனது தீயவுரு நீங்கவும் மேல்கதி அடையவும் அருள் செய்ய வேண்டுமென்று அது விண்ணப்பிக்க - அப்படியே தனது அனுட்டான பலனை அதற்குத் தந்துதவினுர்கள். அது முதல் இவ்வாதீனத் தலைவர்கள் ஒருகால அனுட்டானம் அதிகமாகச் செய்து வருகிறுர்கள்.

வான்வழி சென்ற சித்தரை விரலால் அழைத்து நீறளித்துக் கதியளித்தார். சித்தர் வந்திறங்கிய 'சித்தர் கட்டு இன்றும் திருமடத்தில் இருக்கிறது. வேளாளர்குலப் பெண்ணெருத்திக்குச் சிவதீட்சைதந்து ' முதிரா அவ்விளம் பிஞ்சை நற்கனியாக்கி '- அற்புதம் நிகழ்த்தினுர். இறந்த தன் தந்தை முத்திபெற - ஒருவர் வந்து விண்ணப்பித்தார். தம் குருநாதரின் பெருமையை உலகம் அறியவும் இது ஒரு வாய்ப்பு என எண்ணியவர் போல ஸ்ரீ ஞானபுரீச்சரர் கோயிலை மனைவியுடன் வழிபட்டு வாருங்கள் என்றுர். அவர்கள் அப்படியே செய்ய வாக்குப்படி - இவர் அவர் தந்தை முத்தியுலகடைந்த விபரம் கூறி மகிழ்வித்தார்.

சில ஆண்டுகளின் பின் காசியாத்திரை செய்யும் அவா திருவுள்ளத்திலெழுந்து அங்குச் சென்று தரிசித்து, துண்டிராஜர் - விசுவநாதர் - அன்னபூரணி - கேதாரநாதர் - காலபைரவர் - (கதிர்காம) வேலவர் - கேதார கௌரி, காசி விருத்தகாளேச்சரர்

போன்ற தெய்வங்கள் பேரிலும், பாகீரதியாம் கங்கை, அங்கு உபதேசிக்கப்படும் தாரக மந்திரம் என்ற இவற்றின் மேன்மையையும் நினைந்து பாடல்கள் பாடியருளுனார்கள்.

பின் தருமை மீண்டு சில ஆண்டுகள் அருட்செங்கோல் செலுத்திப் பின்வந்த சச்சிதானந்த தேசிகருக்கு ஞானபிடேகம் செய்துவிட்டு ஐப்பசி மாத கிருட்டிணபக்க பத்தாம் நாள் முத்தி நிலையடைந்தார்கள். இவர்களைத் 'தருமபுர ஆதீனத்துச் சந்நியாசி துண்டிராஜ கணபதி திருவருட்பா முதலியவை பாடினவர்' என்று அபிதான சிந்தாமணியில் காட்டியிருக்கிறார்கள். இவர்கள் காலம் கி. பி. 1740 என இருக்கலாம் என்கிறார்கள். இவர்கள் அருளியுள்ள பதிகங்கள் பதினாறும். ஸ்ரீ காசி சம்பந்தமான பத்துப் பதிகங்களும், சிதம்பரம், திருவாரூர், சீர்காழி, வேளூர், மதுரை சம்பந்தமான ஆறு பதிகங்களும் இப்போது காணக் கூடியனவாக உள்ளன. நூல் திருவருட்பாத்திரட்டு என்ற பெயருடன் உள்ளது. எடுத்தகாரியம் இனிது விளக்கம் பெறும் நோக்கில் முதல் பதிகம் கணபதிப் பெருமான் மேலேயுள்ளது.

பத்துப் பாடல்களின் பொருளமைப்பும் கீழே காணுமாறு உள்ளன.

1. வடிவச்சிறப்பு. 2. ஆற்றலின் பெருமை. 3. தகுதிக் குறிப்பு. 4. விண்ணப்பம். இதே அமைப்பில் இக்கட்டுரையும் அமைகிறது.

துண்டிராஜ கணபதி என்னும் ஸ்ரீ காசியில் உள்ள விநாயகர் பதிகம் ஆதலால் அதுகுறித்த விபரம் முன்னே சிந்திக்கப்படுகிறது. துராசாரன் என்ற அசுரனைக்கொல்வான் வேண்டிப் பார்வதிதேவி ஐந்து முகங்களும், பத்துக் கைகளும் கொண்டிருக்க அவ்வடிவிலிருந்து அப்படியேயான விநாயகர் அவதரித்து அவ்வசுரனை அழித்தார். அதனால் வக்ரதுண்டர் என்றும் துண்டி விநாயகர் என்றும் பெயர் பெற்றார்.

## வடிவச்சிறப்பு :

சிறப்புடைய நாயகன் என்றபொருளும், தனக்குமேல்தலைவன் இல்லாதவன் என்ற பொருளும் விநாயகர் என்ற பதத்திற்கு அமையும்.

அவர் திருமேனி இடையின் கீழே பூதஉடம்பு; இடைக்கு மேல் கழுத்துவரை தேவ உடம்பு; தலை மிருகத்தலை; ஒருகொம்பு ஆண் தன்மை; கொம்பில்லாத பகுதி பெண் தன்மை; யானைத் தலை அஃறிணை; தெய்வ சரீரம் உயர்திணை. இவ்வாறு எல்லாம் ஆய திருவுருவம் அவருடையதாகிறது.

பூதமாய், தேவராய், விலங்காய், ஆணாய், பெண்ணாய், உயர்திணையாய், அஃறிணையாய் எல்லாமாய் விளங்குபவர் விநாயகர்.

பருத்த வயிறு அகில உலகத்தையும் அடக்கிக்கொண்டிருப்பதன் அடையாளம், கும்பம் ஏந்தியகரம்-ஆக்கல் தொழிலை, மோதகம் ஏந்திய திருக்கரம் காத்தல் தொழிலை, அங்குசம் ஏந்திய கை ஒடுக்கல் தொழிலை, பாசம் ஏந்திய கரம், மறைதல் தொழிலை, தந்தம் தாங்கிய கரம் அருளல் தொழிலைச் செய்வதால் ஐந்தொழிக்கும் இவர் நாயகனாவார்.

அருட்கருணையை நிதியாக்கொண்ட இவர் ஓங்காரவடிவான பாதத்தாமரைகளை, அவற்றின் மேல் இரண்டான வேதச் சிலம்புகளைப் பெற்றிருக்கிறார். உதிக்கும் கதிரவன் ஒரு கோடி சேர்ந்தாலென ஒளியும், நீரின்றிப் பூசிய நீற்றின் ஒளியும், அழகாயமைந்த யானை முகமும், தும்பிக்கையும், வளருகின்ற தோள்களாகிய பவளக்குன்றங்கள் நான்கும், பாசம் அங்குசம், கொம்பு, மோதகம் இவற்றைப் பரிவொடு தாங்கிய கைகளும் விடாத கருணைமழை பொழியும் முக்கண்ணும், நிறைந்த மும்மதமாம் மழையும், நீண்ட சடைக்காடும், அதில் வெண்பிறையும், ஒப்பற்ற தொந்தியும் கொண்ட இத்தோற்றத்தினை நெஞ்சில் வைப்பேன் - ஒருக்காலும் மறவேன் என்கிறார் ஸ்ரீ சிவஞானதேசிகர்.

ஓங்கார வடிவான உன்பாத தாமரையும்
உபயபரி புரமறைகளும்
உதிக்கின்ற செங்கதிர்கள் ஒருகோடி நிகரொளியும்
உத்தூள நீற்றி னொளியும்
பாங்கார் கசானனமும் முககரமும் வளர்புயப்
பவளா சலங்கள் நான்கும்
பாசமுட னங்குசம் கொம்போ ரிலட்டுகம்
பட்சமொடு வைத்த கரமும்
நீங்காத அருள்மாரி பொழியும்திரி யம்பகமும்
நிறையுமும் மதமாரியும்
நீள்சடா டவியும்வெண் பிறையும்ஒரு தொந்தியும்
நெஞ்சில்ஒரு காலும் மறவேன்
காங்கேயன் மகிழ்தமைய னேகங்கை நதிபெருகு
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேருவே அருட்
கருணை நிதிக் கடவுளே.

## ஆற்றலின் பெருமை :

கயிலைக்கிரியும் மேருமலையும் கொம்புகளாக அனந்தனைக் கங்கணமாக் கொண்டவர், தீ, இரவி, மதி இவற்றைக்கண்களாகக் கொண்டவர். மகாசலதிகளே மும்மதநீர். சண்ட மாருதம் அவர் காதசைவால் எழும். சக்ரவாளகிரியே நீள்துதிக்கை. பரிபாகரைக் கொண்டு குற்றேவல் கொள்கின்ற பரப்பிர்ம மத்தகஜமென்ற விநாயகர். கன்னெஞ்சுடை என் மலக்காட்டை முறிக்காதது ஏன் என்கிறார். நெஞ்சில் நிறைவான திரோதானகோபத்தை நீ நீக்கி என் தற்போதமாம் நிறைகவளத்தை அருள்வாயினால் உண்டு மகிழ வேண்டுகிறேன் என்கிறார்.

உள்ள மெனும் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதியாகத்
தள்ளரிய அன்பென்னுந் தொடர்பூட்டி யிடைபடுத்தித் தறுகட் [பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணையென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைகள் [தீர்ப்பாம்.

— திருவிளையாடற்புராணம்.

ஆக இவரைத்தவிர பிறதெய்வங்கள் பால் சென்று இரத்தல் வேண்டாம் என்ற இவரது கொள்கைப் பிடித்தம் நூலில் வெளிப்படையாகவே தெரிகிறது

## தகுதிக்குறிப்பு :

பதினெண் கணங்களுக்கும் தலைமையுடையவராக இவரைக் கொள்வதால் இவரைக் கணங்களின் பதியாக 'கணபதி' என்று அழைக்கிறோம்.

மாலயன் அறியாத மகாதேவனும், இந்திரன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும், முனிவர்களும், பாம்பணையில் துயில்வோனும், பிரம்மதேவனும், திசைநாயகர்களும் காரியம் தொடங்கு முன் உவப்பொடு தங்கள் சென்னி உப்யகர மேற்கொண்டு குட்டிக்கொண்டே தொழில்கள் தொடங்குகின்றார்கள் என்றால் இவர்பெருமை அளவிட முடியாதென்பது விளங்குகிறது.

## விண்ணப்பம் :

இவர் ஆர்வமெல்லாம் கங்கையில் மூழ்கிடவும். விநாயகர் தரிசனம் காணவும், மெய்யடியார் ஏவல் செய்து மகிழ்வதிலும், நிறைந்திருந்தது. உன் திருவடித் தாமரையை நம்பினேன் நீ அலால்திக்கு வேறில்லை உனைமறவாத ஆனந்த வாழ்வன்றி அமரர் வாழ்வும் விரும்பேன். பரிபூரகமில்லாத நான் வாரணாசியில் புகழப் படும் மணிகன்னிகைப் பாகீரதிக்குள்ளே நாயாகப் பிறந்தாலது,

மெய்ப் பாரத்தை அங்கே போக்க வேண்டும். அதற்கே நீ அருள் செய்ய வேண்டும் என்ற விண்ணப்பம் கடைசி மூன்று பாடல்களிலும் இழையோடி இருப்பது காணலாம்.

காசியின் பெருமை, மானிடப்பிறப்பின் அருமை, அப்பேற்றின் புனிதம் நூல் முழுமையும் இழையோடும் அருமை காணக் கூடியதாயுள்ளது.

## விநாயக வழிபாடு :

மிகத்தொன்மையானஇவ்வழிபாட்டைப் பல்வேறு இலக்கியங்களும் புராணங்களும் வலியுறுத்துகின்றன.

மணிமேகலையில் 'கரகங் கவிழ்த்த காவிரிப்பாவை' என்ற குறிப்புக் காவிரியின் உற்பத்தியுடன் விநாயகர் செய்த தந்திரமும் கூறுவதாயுள்ளது.

கந்தபுராணம் இந்திரனுக்காக விநாயகர் காவிரி கொண்டு வந்ததைச் சுட்டும். இவ்வரலாறு பிரபுலிங்கலீலையில்,

" சுரகுலாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரணம் நாளும் தலைக்கணி யாக்குவாம் "

என்று குறிக்கப் படுகிறது.

தொல்காப்பியம் சொல்லதிகார சேனாவரையர் உரை
" தன்தோள் நான்கின் ஒன்றுகைம் மிகூஉம்
களிறுவளர் பெருங் காடாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியஎன் நெஞ்சே "

என்பதைச் சுட்டுகிறது. நச்சர் தம் உரையில்,

" தட்ந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு மிளிர
வென்றூடு திருத்தாதை வியந்துகை துடிகொட்ட
நின்றூடு மழகளிற்றை நினைவாரே வினையிலரே "

என்று குறித்திடும் திறம் இங்கே நோக்கற்குரியது.

## அருளிச் செயல்கள் :

ஔவையாருக்குக் கயிலைசேரும் வாய்ப்புத்தந்தமை - பாரதம் எழுதினமை - முருகப் பெருமானை வள்ளியோடு இணைவித்தமை நம்பியாண்டாரின் பூசனை ஏற்றுத் திருமுறைகளை வெளிப்படுத்தியமை போன்ற செயல்கள் திருப்புகழ்களாகப் பாடப்படுகின்றன.




**வழிபாடு :**

அவருக்குப் பிடித்த அறுகம்புல்லால் பூசித்து, அப்பம் அவல் பொரி இவற்றை நிவேதிக்க விரும்பியவெல்லாம் அவர் தருவார்.

இக்கவரை நற்கனிகள் சர்க்கரை பருப்புடனெய்
எட்பொரி யவற்றுவரை இளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழ மிடிப்பல்வகை தனிமூலம்
மிக்கஅடி சிற்கடலை பட்சணமெனக் கொளொரு
விக்கின சமர்த்தனெனும் அருளாழி
வெற்ப குடிலச் சடில விற்பரம ரப்பரருள்
வித்தக மருப்புடைய பெருமாளே.

— திருப்புகழ்.

**சைவசித்தாந்த சாரம் :**

பதி ஒருவன் பசுக்கள் அவனை அடைய முடியாதபடி தடுப்பது பாசமே. பாசவினை நீக்கமும் இறையருளால்தான் நிறைவேறும் என்பது நம்சாத்திர மரபு. அப்படியான ஆணவ மறைப்பை அருள் சக்தியால் நீக்குக என்ற குறிப்பு - ஆசிரியர்வாக்கில் என் தற் போதமாம், 'நிறைகவளம் அருள்வாயினால் உண்டு கர்ச்சித்து நீ மகிழ்வதென்றோ' என்று உருக்கொள்கிறது.

இறைதத்துவம் மண்முதல் நாத தத்துவங்களாய் அமைந்த விதத்தை (உலக அமைப்பு) 'மண்ணாதி நாதாந்த மான தேகாதிப் பிரபஞ்சம்' என்பதாகக் குறிக்கிறார்.

பாச மயக்கத்தை 'பகலிலே இருளில் மூழ்கிக் கிடப்பது' - என்பார். 'யான் என்றும் எனதென்றும் உன்னிலை நாடியும் ஏங்கியிடர் படல் நீதியோ' - என்று பேசுவார்.

இப்படிப் பல்வேறு அனுபவக் கருவூலமாக நூல்விளங்கும் அமைப்பு எண்ண எண்ண இன்பம் தருவதாகும். அதற்கொரு எடுத்துக்காட்டாக இம்முதல் பதிகம் அமைந்தது - என்பதில் ஐயமில்லை.

அறிவுலகம் சுவைதேர்ந்து தெளிய இந்நூல் நல்விளக்காய் அமைந்துள்ளது.



குருபாதம்

தருமை ஆதீனம்

# அனைத்துலக
# சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்

1-69 வடக்குவீதி, தருமபுரம், மயிலாடுதுறை 609001.

**நோக்கம் :**

அனைத்துலக சமய தத்துவங்களோடு
சைவசித்தாந்த ஒப்பாய்வு.

**பணிகள் :**

1. சைவசித்தாந்த சாத்திர நூல்களின் ஆய்வடங்கல் தயாரித்தல்.
2. சைவசித்தாந்த மரபுச் சொல் அகராதி தயாரித்தல்.
3. சைவசித்தாந்தக் கலைக்களஞ்சியம் வெளியிடல்.
4. அரும்பொருளகம் - அருங்கலைக் கண்காட்சி அமைத்தல்.
5. பல சமய தத்துவங்கள் பற்றிய கருத்தரங்குகள் நடத்துதல்.
6. ஆய்வு நூல்களும், மொழிபெயர்ப்பு நூல்களும் வெளியிடுதல்.
7. நூலகம் அமைத்தல் (பலவகைத் தத்துவ நூல்களுடன்).
8. வெளிநாட்டவர்க்குத் தத்துவநெறி விளக்கம் செய்தல்.
9. சைவ சித்தாந்தக் கல்லூரி நடத்துதல்.
10. சமய போதனைப் பாட நூல்கள் தயாரித்து வெளியிடுதல்.
11. இதழ்வழிச் சமயக்கல்வி அளித்தல்.
12. பஞ்சாங்கம், புராணம், இதிகாசம், சங்க இலக்கியம் ஆய்வு செய்தல்.

---